கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

சிதம்பரம்

மறைஞானசம்பந்தநாயனர்

அருளிச்செய்த

# மகாசிவராத்திரிகற்பமுதலியன.

இவை,

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மபுரம்

ஸ்ரீ-சிவஞானபாலையதேசிகராதீனத்துச்

சிதம்பரம் ஈசானியமடம்

ஸ்ரீமத் - இராமலிங்கசுவாமிகளவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,

ஷை சுவாமிகளெழுதிய சூசனமுதலியவற்றோடு,

சென்னைக் கிரிஸ்டியன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதர்

ஈ - இரத்தினவேலுமுதலியாரால்

தமது

பண்டித மித்திர யந்திர சாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

1901.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

சிதம்பரம்

மறைஞானசம்பந்தநாயனார்

அருளிச்செய்த

# மகாசிவராத்திரிகற்பமுதலியன.

இவை,

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மபுரம்

ஸ்ரீ-சிவஞானபாலையதேசிகராதீனத்துச்

சிதம்பரம் ஈசானியமடம்

ஸ்ரீமத் - இராமலிங்கசுவாமிகளவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,

ஷை சுவாமிகளெழுதிய சூசனமுதலியவற்றோடு,

சென்னைக் கிரிஸ்டியன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதர்

ஈ - இரத்தினவேலுமுதலியாரால்

தமது

பண்டித மித்திர யந்திர சாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

1901.

உ

சிவமயம்.

க. மகாசிவராத்திரிகற்பம்.

உ. மாதசிவராத்திரிகற்பம்.

ரு. சோமவாரசிவராத்திரிகற்பம்.

ச. சோமவாரகற்பம்.

ரு. வருத்தமறவுய்யும்வழி.

சு. உருத்திராக்கவிசிட்டம்.

எ. திருக்கோயிற்குற்றம்.

---

க. ஷை நூல்களின் சூசனம்.

உ. சிவராத்திரிபுராணத்தில்சிவராத்திரிமான்மியச்சருக்கம்.

இவை இதிற் சேர்க்கப்பட்டுள்ளன.

---

விலை அணா - ச.

உ

கணபதி துணை.

# முகவுரை.

இந்நூலாசிரியர் வேளாளர்குலத்திலே பரம்பரைச்சைவாசாரியர் மரபிலுதித்து, மறைஞானசம்பந்தரெனத்திருநாமம் பெற்று இளம்பருவத்திலேயே இலக்கிய இலக்கண முதலிய கருவிநூல்களையும் சைவசித்தாந்த சாத்திரங்களையும் சிவாகமாதிகளையும் நல்லாசிரியரைவழிபட்டு முறையினுய்ந்து, வடமொழி தென்மொழிகளில் வல்லராய், அவற்றினுண்மைப் பொருள்களை ஐயந்திரிபறத்தெளிந்து, மெய்யுணர்வுடையராகி, நன்மாணுக்கர்களுக்குக் கல்விகற்பித்தலோடு ஞானோபதேசமும் புரிந்துகொண்டு, சிதம்பரத்திலே வீற்றிருந்தவர்.

இத்தகைய இவர் தாம்பெற்ற அரும்பேறு தமிழ்நாடுமுற்றும்பெறுவான் கருணைமேலீட்டினால் சிவஞானசித்தியார் சுபக்ஷத்திற்கு ஒரு அரியஉரையும், உபாகமங்களுளொன்றாகிய சிவதருமோத்தரமும், தாம்பயின்ற சிவாகமங்களின்வழியே சைவசமயநெறி பரமததிமிரபானு சங்கற்பநிராகரணம் இறைவனூற்பயன் பஞ்சாக்கரமாலை சிற்றம்பலநாடிமாலை மகாசிவராத்திரிகற்பம் மாதசிவராத்திரிகற்பம் சோமவாரசிவராத்திரிகற்பம் சோமவாரகற்பம் வருத்தமறவுய்யும்வழி உருத்திராக்கவிசிட்டம் திருக்கோயிற்குற்றமுதலியவைகளும், அருணகிரிபுராணமும் தமிழில் அருளிச்செய்திருக்கின்றனர். இவரருளியவெல்லாம் யாவரும் விதிவிலக்குக்களையறிந்து உண்மை தெளிந்து முத்தியின்பம் தலைக்கூடுதற்கு முக்கிய சாதனமாக உள்ளவைகளேயாம்.

இவற்றுள், அச்சிற்பதிக்கப்படாதன வெல்லாம் பதிக்க வேண்டுமென்று திருக்கைலாசபரம்பரைப் பொம்மபுரம் ஸ்ரீ சிவஞானபாலையதேசிகராதீனத்துச் சிதம்பரம் ஈசானியமடம் ஸ்ரீமத்-இராமலிங்கசுவாமிகளவர்கள் மிகமுயன்றும் எங்குங் கிடைப்பது அருமையாக, அவைமுற்றும் ஒருங்கு எழுதப்பட்டதொருபிரதி சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை அதிபதியவர்களாகிய ஸ்ரீமத் சதாசிவப்பிள்ளையவர்கள்பாற் கிடைத்தது. அதில் மகாசிவராத்திரிகற்பமுதலிய இவ்வேழும் எழுதிக்கொண்டு பின்னொருகால் நாடியவழி அப்புத்தகம் எவ்வாற்றானே தவறினமையின் பெறற்கரியவாயுள்ள இவற்றை ஒருவாறு நிலவுவித்தல் வேண்டுமென்னுங்கருத்தால் இந்நூல்களினிருந்தகுறைபாடுகளைப் பலபுராணாதிகளினுதவிகொண்டு திருத்தி, முக்கியமாக வேண்டப்படும் சிலகுறிப்புக்களும் சூசனங்களும் எழுதியளிக்க, அவ்வாறே அச்சிற்பதிப்பிக்கப்பட்டன. பதிக்குங்கால் எனக்குக் கிடைத்த சிவராத்திரிகற்பம் சோமவாரகற்பமென்னும் பிரதிகளினும் முற்கண்ட குறைபாடு ஒத்தேயிருந்தன. ஆகலின், இவ்வேழு நூல்களுள்ளும் மற்றும் அச்சிடப்படாதுள்ள பரமதிமிரபானுமுதலிய ஐந்நூல்களுள்ளும் ஏதேனுங்கிடைக்கப்பெற்றுள்ளவர்கள் தயைகூர்ந்துதரின் சுத்தபாடமாக்கி ஒருங்குநிலவுவித்தல் வேண்டுமென்பது உத்தேசம். இத்திறத்த அரியநூல்கள் கிடைக்கப்பெற்றிருந்தும் யாவருக்கும் பயன்படுமாறு புரியாது வைத்திருந்து செல்முதலியவைகட்கு இரையாக்கிவிடுவது மாண்பன்று. இங்ஙனம் உபகரித்தற்குணமின்மையானே ஒருவர்க்கும் பயன்படாதொழிந்தநூல்கள் எண்ணிறந்தனவென்பது எவருமறிந்த விஷயமேயாகலின் யாம் அதுபற்றி விரித்திலம்.

ஈ. இரத்தினவேலு முதலியார்.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# மகாசிவராத்திரிகற்பம்.

உலகம் புரிய வுமைபெற்ற வைங்கை
மலையினடி வாரஞ்சேர் வாம். ௧.

உலகமும் பல்லுயிரு மொன்றிநிறைந் தோங்கி
யிலகுமம லன்சிவமென் பேம். ௨.

அனைத்துயிரு நீங்கா வமலனை நீங் காளென்
மனத்தினுமுள் ளாள்குறையென் மற்று. ௩.

சந்தனடி பந்தனடி கட்டுணாவேந் தன்முதலோர்
தந்திருத்தா ளும்பணியாந் தாழ்ந்து. ௪.

ஆகமத்து மாராய்ந் தமலசிவ ராத்திரியின்
மாகத்திற் பூசனைசொல் வாம். ௫.

---

(௧) அடிவாரமென்பது இரட்டுறமொழிதல். (௨) இக்கற்பத்திலுள்ள சிவத்துதி பிரதியிற் காணப்படாமையின் இந்நூலாசிரியரருளிய பரமததிமிரபாநுவிலுள்ள துதி யிரண்டினொன்று ஈண்டுச் சேர்க்கப்பட்டது. (௫) சௌரமானப்படி கும்பத்திற் சூரியனணுகியபின்வரும் மாக மாத அபரபக்கச்சதுர்த்தசி உத்தமமும், சாந்திரமானப்படிவரும் மாகமாத அபரபக்கச்சதுர்த்தசி மத்திமமும், சாந்திரமானப்படிவரும் பால்குனமாத அபரபக்கச்சதுர்த்தசி அதமமுமாமென்று காரணம் காமிகமுதலிய ஆகமங்களினும்; சாந்திரமானப்படி மார்கழியில்வருந் தைமாதத்திற்கு விவாகமுதலிய சுபகாரியங்களில் நிஷேதமேற்பட்டிருப்பதுபோலத் தைமாதத்தில் வருகிற மாகமாதசிவராத்திரி கொள்ளலாகாதென அம்மாதத்திற்கு நிஷேதமேற்பட்டிருத்தலின் சௌரமானப்படி மாசிமாதத்தில்வரும் சாந்திரமான மாகமாசமே மாகமாசமெனக்கொள்ளல்வேண்டுமென்று மேற்படி காமிகம் புரோற்கீதமுதலிய ஆகமங்களினும் கூறப்பட்டிருத்தலான் ஈண்டுக்கூறுவது அவ்வுத்தமமாத சிவராத்திரியேயென்பார் "மாகத்தில் அமலசிவ ராத்திரியின் பூசனை சொல்வாம்" என்றார்.

மாகத் தபரதிர யோதசியோ டேபதினன்
கேசவா ரத்திளிசை யின். ௬.

அற்றைநிசி யிற்சிவன்று ளர்ச்சிக்க பாசவித
மற்றமலன் பாதமடை வார். ௭.

சத்திமய மேபதின்மூன் றும்பிற் சதுர்த்தசியச்
சத்திமான் மேனியே தான். ௮.

இரவுதிர யோதசிநா லேழொன்றி லேடே
யொருநா ழிகைபதினன் குள். ௯.

ஒன்றியுறி னுத்தமத்தி னுத்தயமே சத்திமயங்
குன்றியுறி னுத்தமமாக் கொள். ௧0.

ஒன்றுடனு மொன்றுச் சதுர்த்தசியி னர்ச்சிக்க
மன்றவது தான்மத்தி மம். ௧௧.

ஒன்றிற் சதுர்த்தசியி னேடே யமாவாசை
மன்றவது தானதம மாம். ௧௨.

கூடினமா வாசைபதி னன்கிறதிக் கூறுதனிற்
கூடுமதற் குப்பெயர்கு கு. ௧௩.

புரிந்தார் குகுப்புணர்ந்த பொல்லாநாட் பூசை
யெரிந்தார் நிரயத் திழிந்து. ௧௪.

வைதிகர்க்கே பாங்கமா வாசைச் சதுர்த்தசிதான்
சைவர்க் கதன்முன்னட் சால்பு. ௧௫.

திதித்திரயஞ் சேர்ந்த சிவராத் திரிதான்
மதிக்கிலிரு வர்க்கும் வரம். ௧௬.

அற்றைநிசி யந்தத் தமாவாசை தான்வந்து
பற்றுதன்முன் பூசையினைப் பண். ௧௭.

---

(௮) மயம் - வடிவம். பின் - ஈண்டு அபரபக்கம். (௧0) சத்திமயம் - ஈண்டுத் திரயோதசி திதி. (௧௩) குகுவென்பதற்கு, சந்திரதரிசனமில்லாத தென்பதுபொருள்.

தந்தமக்குத் தக்கசம யத்தினருச் சித்தார்க்குச்
சிந்துமிடர் வாய்க்குஞ் சிறப்பு. ௧௮.

அருச்சனையில் லாருறங்கா தற்றைநிசி முற்றுஞ்
சரிக்கசிவன் ருள்வணங்கித் தாம். ௧௯.

தரிக்க கவுதுகமுன் ளுதன்பின் ளுளிற்
பிரிக்கவுண லாதி பிற. ௨0.

ஆடிநீர் வேண்டுமுப யோக விதமனைத்துந்
தேடிச் சிவபூசை செய். ௨௧.

புரிகயா மந்தோறும் பூசைநிசி வேலை
பரிவுறவே நூல்விதியைப் பார்த்து. ௨௨.

ஆட்டிடுக கவ்வியம்பஞ் சாவமிர்தந் தேனிக்கி
னீட்டியநீர் யாமமுறை யின். ௨௩.

சர்க்கரைதேன் பானெய் ததியென்ற வோரைந்து
மற்புதனுக் காட்டுமமிர் தம். ௨௪.

தாவித்துக் கவ்வியத்தைப் போலத் தனித்தனியே
யாவித் தரன்முடிமே லாட்டு. ௨௫.

சாத்துக வில்வமலர் சாதிநந்தி யாவர்த்தப்
பூத்தனையும் வேலைமுறை புக்கு. ௨௬.

முறையுறவே முற்கான்னம் பாயசந்தி லான்ன
மிறைமுன்சுத் தான்னமுநீ யேற்று. ௨௭.

பரிவுறவே பாத்திய மாதி யனைத்தும்
புரிகவிதி பார்த்துணர்ந்தின் போடு. ௨௮.

---

(௨0) கௌதுகம் - இரக்ஷாபந்தனம். (௨௭) முற்கம் - பச்சைப்பயறு. (௨௩-௨௬-௨௭) இவற்றிற்கூறப்படுவனவற்றை முதற்சாமமுதல் நான்குசாமங்களுக்கும் முறையேகொள்க. (௨௪) இதிற்கூறப்படுவது ரஸபஞ்சாமிர்தமெனவும் இதனோடு வாழைப்பழம் பலாப்பழம் மாம்பழம் மூன்றுங்கூட்டின் அது பலபஞ்சாமிர்தமெனவும் பெயர்பெறும். (௨௫) தாவித்தல் - தாபித்தல். ஆவித்தல் - ஆவாகித்தல் என்பர்.

பசிக்கழிந்தா னீரலது பால்பழந்தா னற்பம்
புசிக்கமுதல் யாமம்பூ சித்து. ௨௯

அற்றை நிசியுறங்கா தர்ச்சித்துப் பாரணத்தை
மற்றையநாட் செய்கை வரம். ௩0.

ஆரணனை யர்ச்சித் தமுதருத்தி யன்பர்க்குப்
பாரணத்தை நீபின்பு பண். ௩௧.

பாரணஞ் செய்தான் பகலுறங்கி னூற்றவனை
யாரணனைக் கொன்றபழி யாம். ௩௨.

உறங்கினான் சாந்தியெனு மோமம் புரிக
மறைந்துகெடு மேயந்த மாசு. ௩௩.

அங்குர மாதி யியற்று வகவினையு
மங்குமுறை செய்நூன் மதித்து. ௩௪.

அக்கால மாகச் சதுர்த்தசியி னர்ச்சித்துப்
புக்கான்வே டன்மேற் புரம். ௩௫.

தூர்த்தன் சுகுமார னந்தணன்மா கப்பூசை
பார்த்தான்கே தத்தாசைப் பட்டு. ௩௬.

அற்றான்முன் செய்த வவல வினையனைத்தும்
பெற்றான் சிவபுரத்தைப் பின். ௩௭.

நின்மலனை நூல்விதியி னர்ச்சித்த நேசர்க்குப்
பன்னவல்லா ராரே பலம். ௩௮.

கடனுறவிக் கற்பத்தைக் கற்றவர்கேட் டாரு
மடைவரம லன்சிவலோ கம். ௩௯.

மகாசிவராத்திரிகற்பம் முற்றிற்று.

---

(௩0) பாரணம் - சத்தியையுண்டபின்னும் போசனமெனப்படும். (௩௪) அகவினை - பாவச்செயல். (௩௯) கற்பம் - விதி.

சிவமயம்.

# மாதசிவராத்திரிகற்பம்.



மாதசிவ ராத்திரியுஞ் சொல்வா மலமறுக்கும்
போதகன்பா தத்தார்வம் பூண்டு. க.

பங்குனிக்குஞ் சித்திரைக்கும் வைகசிக்கும் பாங்கபர
திங்களென வேண்டீ தெளி. உ.

இரண்டுபதின் மூன்றைந் தெனுந்திதியிற் பூசை
யிரண்டறு வீசற் கியற்று. ௩.

முந்தியுறும் பக்கந்தா னனிமுத லைப்பசியே
யந்தமிவற் றிற்பாங்கே யாம். ௪.

மூன்றெட்டு முந்நான்கைந் தேழு முறையுறவே
யான்றதிதி நாளருச்சி யர்ங்கு. ௫.

இருபக்கங் கார்த்திகைக்கு மார்கழிக்கு மேய்க்கு
மிருநான்கீ ராறுதிதி யெண். ௬.

புரிகசிவ பூசையினைப் பூருவபக் கத்தி
னிருநான்கிற் றைமாதத் தின். ௭.

இட்டலிங்கந் தன்னிற் பரார்த்தத்து மிம்முறையே
யிட்டமுறப் பூசை யியற்று. ௮.

பாரணத்தை மற்றையநா டன்னிற் பகற்பணுக
பூரணனைப் பூசை புரிந்து. ௯.

இரண்டு படினே திதியிரவி னேற்றந்
திரண்டதிதி தானே சிறப்பு. ௧0.

---

(க) போதகன் - யானைமுகவிநாயகன். (உ) அபரதிங்கள் - ஈண்டு அபரப்க்கம். இச் செய்யுண்முதலியவற்றிற் கூறப்படுமாதங்கட்கு அவ்வவற்றின்கீழ்க் கூறப்படும் இலக்க முள்ள திதிகளை முறையே கூட்டிக்கொள்க.

இந்தமுறை மீன மெழுவாய் மகரந்தா
னந்த மிவற்றனைத்து மாம். ௧௧.

அற்றூரே பாவ மருச்சித்தா ரிந்தமுறை
பெற்றார் சிவலோகம் பின். ௧௨.

அங்குர மாதி விதியறிந்தே யாகமத்தி
லிங்கியற்றி னன்றென்றே யெண். ௧௩.

இந்த வியலை யெழுதிற் படித்திடினும்
பந்தவினை போமுறு மின்பம். ௧௪.

மாதசிவராத்திரிகற்பம் முற்றிற்று.

---

சிவமயம்.

## சோமவார

# சிவராத்திரிகற்பம்.



தந்திமுகன் றுணிணைவாந் தானே தருமெய்முட்
சிந்தனை செய்வ சிறப்பு. ௧.

சொல்வா மினிச்சோம வாரசிவ ராத்திரியு
மெல்லாஞ் சிவமென் றெணி. ௨.

சந்திரவா ரத்துதயந் தங்கியமா வாசைநிசி
யந்தியயா மத்தினுமுற் றூல். ௩.

ஒருமூன்று கோடிசிவ ராத்திரியோ டொக்கும்
பரமசிவ னைப்பூசை பண். ௪.

அந்தியயா மத்தி னரைநா ழிகையுறினு
மந்தியயா மத்தினிறை வாம். ௫.

அற்றிடினே யந்தியயா மத்தினமா வாசைசிறி
தற்றநிசி பூசைவர மன்று. சு.

மற்றையநாட் பூசை முடித்து மறையவர்க்கு
நற்றவர்க்கு மோதனத்தை நல்கு. எ.

அருந்தியதன் பின்னுறங்கா தன்றுபக லெல்லா
மிருந்துசிவன் பாதமல ரேத்து. அ

அருச்சித்தா ரிவ்வா றரித்துமல மெல்லாம்
பரித்திருப்ப ரீசன் பதம். கூ.

உத்தரபக் கத்திற் சதுர்த்தசிமுன் னோதுமுறை
யொத்துறினே யவ்வாரத் துள். க0.

அற்றை நிசியு மரியசிவ ராத்திரியாம்
பற்றறுப்பா னைப்பூசை பண். கக.

பண்ணிடுக மற்றையநா ளைப்பகலிற் பூசனையைப்
பண்ணியதன் பின்பா ரணம். கஉ.

அருத்தித் தவத்தார்க்குப் பின்று மருந்திற்
பரிப்பார் விரத பலம். கங.

புரிந்தார்க ளிந்தநிசி யிற்சிவனைப் பூசை
பிரிந்தான் சிவலோகம் பெற்று. கச.

அண்டமனைத் தும்மொடுங்கும் போதகனோ யற்றமலங்
கண்டிதிளைப் பார்சிவபோ கம். கரு.

உறுவ ருகந்தாரு மிங்கோன் புளத்தே
யறுவர்கா மாதிகல சம். கசு.

ஓர்ந்தார்க ளிந்தவிய றத்தமுளத் தூனமலந்
தீர்ந்தே திளைப்பார் சிவம். கஎ.

சோமவாரசிவராத்திரிகற்பம் முற்றிற்று.

சிவசண்முகன்றுணை.

# சிவராத்திரிகற்பசூசனம்.

முன்னொரு கற்பவிறுதியிலே, பிரமதேவர்முதலிய பிரபஞ்சமனைத்துஞ் சிவத்திலொடுங்க, அவ்விரவிலே உமாதேவியார் சிவபெருமானை வேதாகமவிதிப்படி நான்கு யாமமும் அருச்சித்து, அவ்விரவுபுலர்ந்தபின் அப்பெருமானையிறைஞ்சி, "யான்வழிபட்ட இவ்விரவு சிவநிசியென வழங்கவும் இந்நிசியிலே நான்குயாமமும் பூசைபுரிந்தவர் முத்தியெய்தவும் அருளவேண்டும்" என வேண்டி வரம்பெற்றனர். இதுவே சிவராத்திரி வரலாறென்பர்.

இஃதன்றியும், மற்றொரு கற்பவிறுதியிலே, பிரளயவெள்ளத்தாழ்ந்த வுலகைத் திருமால் வராகவுருக்கொண்டு தூக்கி நிறுவி, மேருவாதிய மலைகளை அதற்காதாரமாக நாட்டி, பின்னர்த் தமது நாபிக்கமலத்துதிப்பித்த பிரமதேவருக்கு உலகைப்படைக்குமாறு பணித்து, தாந் திருப்பாற்கடலை யடைந்து அறிதுயிலமர்ந்திருக்க; அப்பிரமதேவர் முன்போல யாவும் படைத்துத் தாமே இறைவரெனத்தருக்கித் தம்மாலாக்கப்பட்ட அனைத்தையும் நாடிவருங்கால், அத்திருப்பாற்கடலையெய்தி, ஆங்குள்ள திருமாலையெழுப்பி, நீ யாவனென வினவினர். அவர் யானே யாவுநல்கும் பரம்பொருளென்லும், பிரமதேவர் யாவுநல்கும் பரம்பொருள் யானேயாக நீ யிங்ஙனமிசைப்பதென்னெனக் கலாம்விளைத்தனர். இவ்வாறு இருவரும் கலாய்த்து அஸ்திரசஸ்திரங்களாற் போர்புரியுங்கால் இருவர்க்குமிறுதியெய்தாவாறு இடையே சிவபெருமான் அனற்றிரட்சிவடிவாய்ச் சிவலிங்கவுருக்கொண்டு திகழ்ந்தனர்.

நிகழ்ந்த அவ்விலிங்கோற்பவகாலமாகிய அம்மாசிமாத அபர பக்கச் சதுர்த்தசியோடுகூடிய நடுவிரவே சிவநிசியெனப்பட்டது. பின்னரவ்விருவரும், அச்சோதிலிங்கரூபவடிவின் அடி முடிகாண்பான் றொடங்கி, இயலாமையின் மீண்டு, அப்பெருமானை வழிபட்டு, அக்கடவுளருளியவாறே ஆதியில் அம்பிகை நோற்ற அச்சிவநிசி விரதத்தைத் தாமும் நோற்றலுடையராய், நாலுயாமமும் பூசித்து வரம்பெற்றுத் தேவிமார்களோடு தம் பதவிகளையடைந்து வாழ்ந்தின்புற்றனர். என்பதும் ஒன்று. இவ்விருசரிதமும் வேதாகமபுராணசித்தமே.

இச்சிவராத்திரி மகாசிவராத்திரி மாதசிவராத்திரி பக்க சிவராத்திரி வாரசிவராத்திரி நித்தியசிவராத்திரி என ஐவகைப் படும். அவற்றுள், மகாசிவராத்திரி உத்தமோத்தமம் உத்தமம் மத்திமம் அதமமென நான்குவகைப்படும். இந்நான்கனுள், இரவிலே திரயோதசிதிதி மிக்கிருப்பச் சதுர்த்தசி குறைந்து வருவது உத்தமோத்தமம். திரயோதசிகுறையச் சதுர்த்தசி மிக்குவருவது உத்தமம். இரவுமுழுமையும் சதுர்த்தசியே வருவது மத்திமம். சதுர்த்தசி அமாவாசையோடுகூடிவருவது அதமம் என்பதே இந்நூலாசிரியர் தாங்கொண்டநூற்றுணிபு.

இவ்வாறன்றிச் சூரியோதயந் தொடுத்து அஸ்தமயனபரியந்தம் திரயோதசியிருக்கப் பின் சதுர்த்தசிவந்து அற்றையிரவும் மறுநாட்பகல் அஸ்தமயனபரியந்தமும் இருப்பது உத்தமோத்தமம். சூரியாஸ்தமயனத்திற்குப் பின் சதுர்த்தசி கூடி மறுநாள் அஸ்தமயனத்துக்குப் பின்னும் நிற்பது உத்தமம். சூரியோதயந் தொடுத்து மறுநாட்சூரியோதயம் வரையிற் பொருந்திநிற்குஞ் சதுர்த்தசியும் அஸ்தமயனத்துக்குமுன் கலக்குஞ் சதுர்த்தசியும் அஸ்தமயனத்துக்குப் பின் எழுநாழிகை அல்லது பத்து நாழிகைக்குமேல் கூடுஞ் சதுர்த்தசியும் மத்திமம். இரவிலே இருபது நாழிகை அல்லது பதினைந்துநாழிகைவரை சதுர்த்

தசி நிற்க அப்பால் அமாவாசைவந்து கூடுவது அதமம் என்பதும் நூற்றுணிபே.

அற்றேல், அஃதாகுக. விநாயகசதுர்த்தி மத்தியான்ன வியாபகமும் பார்வணசிராத்ததிதி அபரான்ன வியாபகமும் பிரதோஷம் சாயங்காலவியாபகமும் சிவராத்திரி பிரதோஷ அர்த்தராத்திரிகளின் வியாபகமும் நரகசதுர்த்தசி அருணோதய வியாபகமும் பெறுவதே முக்கியமென்றும், சிவராத்திரிக்குச் சதுர்த்தசிவியாபகம் வேண்டப்படுங்கால மிரண்டனுள் பூசாரம்பகாலமாகிய பிரதோஷகால வியாபகம் இல்லாதொழியினும் இலிங்கோற்பவ காலமாகிய அர்த்தராத்திரி வியாபகம் ஆவசியகம் வேண்டுமென்றும், அர்த்தராத்திரியே இலிங்கோற்பவ விசேடகாலமாகலின் அதிலொரு கலையளவேனும் சதுர்த்தசிவந்துகூடுமாயின் அதுவே சிவராத்திரியென்றும், அர்த்தராத்திரிக்குப்பின் சதுர்த்தசிவந்து மற்றைநாள் அர்த்தராத்திரிவரையுமிருக்க, அதற்குமேல் அமாவாசை வந்துகூடினும் பிந்திய இரவே கொள்ளத்தக்கதென்றும் ஆகமாதிகள் விதித்தலானும்; திரயோதசியோடு சதுர்த்தசிகூடுவதே சிவராத்திரியென்பது ஆகமாதிகளின் கருத்தாயின் அங்ஙனங் கூறுவதே மரபாக அவை அங்ஙனங்கூறாது, உத்தமோத்தமம் உத்தமம் மத்திமம் அதமமென்னும் சிவராத்திரிகளின் பகுப்புக்களையும் இலக்கணங்களையும் அவைகளை யனுட்டிக்கு முறைமைகளையும் தனித்தனிச் சாற்றுதலானும், அர்த்தராத்திரிக்கு முன்னும் பின்னும் சதுர்த்தசி எவ்விரவில் வியாபித்திருக்கின்றதோ அவ்விரவே சிவராத்திரி: அதிற்றானே சிவனைப்பூசித்தல்வேண்டுமென்று காமிகத்தும் குமாரதந்திரத்தும் கூறப்பட்டிருத்தலானும், திரயோதசியோடு கூடினும் அமாவாசையோடு கூடினும் எவ்விரவில் அர்த்தராத்திரி வியாபகமாகச் சதுர்த்தசியிருக்கின்றதோ அவ்விரவே சிவராத்திரியென்று சுவாயம்பு

வாகமத்தும் கிரணாகமத்தும் துணிபுகூறலானும், அர்த்தராத்திரிக்குள்ளேயாவது அதனளவாவது சதுர்த்தசியிருக்க அர்த்தராத்திரிவேளையில் அமாவாசைவந்து கூடுவதுதான் பிரமகத்தியாதி தோஷங்களைத்தரும், பின்னர் ஒருநாழிகை கழித்துவரினும் அதற்கு அத்தோஷமில்லையென்று சிந்தியமுதலிய ஆகமங்களில் விளக்கலானும், திரயோதசியோடு கூடிய சதுர்த்தசியிற்றானே சகல பிரயத்தனமுஞ்செய்து சிவபூசைமுதலியன செய்தல் வேண்டுமென்பது திரயோதசியோடு கூடிய சதுர்த்தசி முக்கியகாலத்திருப்ப அதனைவிட்டு அமாவாசையோடு கூடியதில் செய்தலாகாதென்னுங் கருத்துப் பற்றியதே யாகலானும், பிறவாற்றானும் சிவராத்திரிக்கு இலிங்கோற்பவகாலத்துச் சதுர்த்தசி வியாப்தியே பிரதானமென்று ஏற்படுகின்றது.

அங்ஙனமாக இந்நூலாசிரியர், சிவாகமாதிகளில் மிகத் தேர்ந்தவராய், அவற்றின் வழியே பரமததிமிரபானு சங்கற்ப நிராகரணம் சைவசமயநெறி இறைவனூற்பயன் முதலியவும் *சர்வோத்தமென்னும் மூலசிவாகமத்தின் உபாகமங்களைந்தனுளொன்றாகிய சிவதருமோத்தரமும் தமிழில் அருளிச்செய்தவராயிருந்தும், இவர் இரவிலே இருபத்தொன்பது நாழிகைக்குமேல் சதுர்த்தசி ஒருநாழிகை கலப்பினும் அதுவே உத்தமோத்தம சிவராத்திரியென்னும் வாக்கியம் விதி விலக்கு துதியென்னும் மூவகை வாக்கியத்துள் துதிவாக்கியமேயாகவும், அதை விதிவாக்கியமாகக் கொண்டது மாறன்றோவெனின், மாறன்மை காட்டுதும்:—

இரவில் இரண்டாம்மூன்றாம் யாமங்களே மகாநிசியெனப்படுமென்று பராசரஸ்மிருதியாதிகளினும், அதனுள்ளும் பதினைந்து நாழிகைக்குமேல் பதினேழரை நாழிகைக்குட்

* சர்வோத்தமத்தின் உபாகமங்களைந்தாவன - ஈசானம் சிவதருமம் சிவதருமோத்தரம் திவ்வியபுரோக்தம் குபேரம் என்பன.

பட்டகாலமே மகாநிசியென்றுசுவாயம்புவாகமத்திலும் கூறப்பட்டிருக்கின்றன. மேலும் இக்கருத்தேபற்றி இரண்டாம் மூன்றாம் யாமங்களே மகாநிசியாம். அதன் மூன்றுபாகத்துள் *இரண்டாம் பாகம்வரை திரயோதசியிருக்கப் பின் சதுர்த்தசி வருவதும் அத்தகைய திரயோதசியோடு சதுர்த்தசி இத்தகைய மகாநிசியில் வியாபித்திருப்பதுவுமே உமாசிவராத்திரியெனப்படும். அதுவே † உத்தமோத்தமமென்று முறையே விஜயாகமத்திலும் சிவரகசியத்திலும்; அர்த்தராத்திரிக்குமுன் திரயோதசியும் சதுர்த்தசியும் கலந்துவருவது உத்தமத்தில் மத்திமமென்று கிரணாகமத்திலும்; அஸ்தமித்து நாலுநாழிகைவரை திரயோதசியிருக்கப் பின் சதுர்த்தசிவருவதும் பகல் முழுமையும் திரயோதசியிருக்க இரவில் சதுர்த்தசிவருவதும் உத்தமத்திலதமமென்று முறையே காரணம் விஜயமென்னும் ஆகமங்களிலும்; பகலும்இரவும் சதுர்த்தசியே யிருப்பது மத்திமத்தி லுத்தமமென்று சூக்குமாகமத்திலும்; இரவில் ‡எட்டாம் பாகத்திற் சதுர்த்தசிவருவதும் இரவில் இருபத்தொன்பது நாழிகைக்குமேற் சதுர்த்தசிவருவதும் இரவில் திரயோதசியேயிருக்கப் பின் சதுர்த்தசி ஒரு ¶ கலையளவேனும் வருவதும் மத்திமத்தில் மத்திமமென்று முறையே விஜயம் வாதுளம் காமிகமென்னுமாகமங்களிலும்; உதயத்தில்

---

* மகாநிசியின் இரண்டாம்பாகம்வரை திரயோதசியிருக்க வென்பதற்கு - இரண்டாம் மூன்றும் யாமங்கட்குரிய நாழிகைபதினெந்தையும் முக்கூறாக்கி அவற்றுள் இருகூற்றிற்குரிய நாழிகைபத்தும் முதற்சென்ற யாமத்திற்குரிய நாழிகையேழையும் ஆகப் பதினேழநாழிகைவரை திரயோதசி யிருக்கவெனக் கொள்க.

† உத்தமத்திலுத்தமம் உத்தமதமமெனவும் உத்தமத்தில்மத்திமம் உத்தமதரமெனவும் உத்தமத்திலதமம் உத்தமமெனவும் பெயர்பெறும். இங்ஙனமே மத்திமப்பகுதிக்குங்கொள்க.

‡ இரவில் எட்டாம்பாகமென்பதற்கு - இரண்டரைநாழிகையை ஒருபாகமாகக்கொண்டு பதினேழரைநாழிகைக்கு மேற்பட்டகாலமென்றும் மூன்றேமுக்கால்நாழிகையை ஒருபாகமாகக்கொண்டு இருபத்தாறேகால்நாழிகைக்கு மேற்பட்ட காலமென்றும் கொள்வர்.

¶ கலையென்பது - ஒருநாழிகையளவினுள் பதினைந்தின் ஒருகூறு.

திரயோதசியும் பின்சதுர்த்தசியும் இரவினந்தத்தில் ஆமாவா சையுமாகத் திதித்திரயஞ் சேர்ந்துவருவது மத்திமத்திலதம மென்று இலலிதம் சுப்பிரபேதமென்னு மாகமங்களினும், சிவரகசியத்தினும்; அமாவாசையோடு கூடியதில் ஆராதித்த லாகாதென்பதால் அதுவே அதமமென்று வாதுளம் காமிகம் சந்தானம் யோகஜமென்னு மாகமங்களினும்; அமாவாசை யோடு சேர்ந்ததினிழிவு புலப்படுத்தற்பொருட்டே இங்ஙனம் சிவராத்திரிகள் எழுகூறுகப் பிரித்து விளக்கப்பட்டிருக் கின்றன.

இம்மட்டோ! இன்னும் திரயோதசி சத்திரூபமும் சதுர்த் தசி சிவரூபமுமாகலின் இவ்விரண்டின் சேர்க்கையுடைய இர வே சிவலிங்காகாரமெனப்படுதலால் அத்தன்மைய திரயோதசி யோடுகூடிய சதுர்த்தசியில் விரதமனுட்டித்தல் சிவலிங்க பூசைசெய்தல் நித்திரைவிழித்தன் முதலியவை யியற்றின் கோடியாகபலமும் சகல போகங்களும் முடிவில்மோக்ஷமும், சித்திக்குமென்று மேற்கூறிய விஜயமுதலிய வாகமங்களி னும், காந்தம் பாத்மமுதலிய புராணங்களினும்; அமாவாசை யோடுகூடிய சதுர்த்தசியில் மேலியம்பியவற்றை யியற்றின் பூர்வபுண்ணியத்தைக் கெடுத்துவிடுமென்று வாதுளாகமத் தினும்; சனங்களுக்குப் பயத்தையும் அரசனுக்குக் கெடுதியை யும் செய்யுமென்று காமிகாகமத்தினும்; ஒருகலாமாத்திரம் அமாவாசையோடு கூடினும் அது அதிற்பூசிட்டோர்க்குப் பூர்வ புண்ணியநாசம் பிராணஹானி ரௌரவநரகப்பிராப்தி எய்து விக்குமென்று சந்தானகமத்தினும்; அமாவாசையோடு கூடிய சதுர்த்தசி ஆன்மாநீங்கப்பெற்ற சரீரத்துக்கு ஒப்பு, அன்றிரவு விழிப்பவர்களுக்குப் பிரமகத்தியாதி தோஷமும் நரகப்பிராப் தியுமுண்டென்று யோகஜாகமத்தினும்; பிரதோஷவியாப்தி அர்த்தராத்திரி வியாப்திகளைப் புகழ்ந்துகூறியது உத்தயோத்

தம உத்தம சிவராத்திரிகளைச் சுட்டியேயாகலின் மத்திமபக்ஷத்தில் அவ்வேளையில் சதுர்த்தசிவியாப்தி யில்லாதொழியினும் குற்றமின்றென்பது தோன்ற மகாநிசியில் திரயோதசியோடு வியாபித்திருப்பதே முக்கியமென்று சிவரகசியமாதியவற்றினும்; பிறவற்றினும் இங்ஙனம் திரயோதசியோடு கூடியதற்கே உயர்வுண்மையும் அமாவாசையோடு கூடியதற்கே இழிவுண்மையும் விளங்க இசைக்கப்பட்டுள்ளன.

இவற்றையெல்லாம் ஒற்றுமைப்படுத்து ஒருங்கி ஆராயவுறின் இரவின்முடிவில் சதுர்த்தசி ஒருயாமமேனும் ஒரு நாழிகையேனும் ஒருகலையேனும் வியாபித்திருப்பினும் அத்திரயோதசியின்றே கொள்கவென ஆங்காங்குவருவது துதிவாக்கியமேயாயினும், அடுத்ததினத்தில் பிரதோஷ வியாப்தியோடு அர்த்தராத்திரியின் வியாப்தியுமமையச் சதுர்த்தசியே தனித்துநில்லாது அமாவாசைக் கலப்பும் வரப்பெறுமாகலின் அது நிஷேதமுடைத்தாய் முடிதலான் ஆண்டு அம்முதற்றினமே கொள்ளல்வேண்டுமெனவும் திரயோதசியோடுகூடிய சதுர்த்தசியே எவ்வாற்றானும் நிர்த்தோஷமுடையதெனவும் ஏற்படுதலால், சதுர்த்தசி அர்த்தராத்திரி வியாபகமாக வாராது மேற்கூறிய மகாநிசியின் மூன்றாங்கூற்றிற்கலக்கினும்அதுவே உத்தமோத்தமமெனக் கொள்ளல்வேண்டுமென்பார் அதனது பெருமைதோன்றத் திரயோதசியோடு ஒருநாழிகை சதுர்த்தசி கலக்கினும் உத்தமோத்தமமென்று நாட்டியும், அம்மகாநிசி சம்பந்தத்தினும் இயையாவழி மற்றை உத்தம மத்திம அதமங்களைக்கொள்ளல்வேண்டுமென்பார் அவற்றினிலக்கணங்களைத் தனித்தனிவிதந்தும், அனுட்டிப்பவரனைவர்க்கும் தோஷம் அணுகாவாறு குறிக்கொண்டு ஆகமவாக்கியங்களைத் தழுவிப் பொதுநிலையினிலவி நால்வகைச் சிவநிசியையும் உடன்பட்டு

நன்குவிளக்கிப் போந்தாராகலின் இது மாறுவது யாங்ஙனம்? என்பது.

இக்கூற்றுமிகநன்று: அர்த்தராத்திரிவியாபகமாகச் சதுர்த்தசியிருக்கவேண்டுமென்பதும், அர்த்தராத்திரிக்குமுன் அமாவாசைவரின் அதுவே பிரமகத்தியாதி தோஷங்களைத் தருமன்றிப் பின்னர் ஒருநாழிகை கழித்துவரினும் அதற்குஅத்தோஷமில்லையென்பதும், மேற்கூறிய ஆகமாதிகளின் வாக்கியங்களேயாகவும், அவற்றைக் கொள்ளாது திரயோதசியோடு கூடிய சதுர்த்தசியை வியந்தவாக்கியங்களை மட்டுமே ஈங்குப் பிரமாணமாகக் கொண்டது யாதுபற்றியெனின் கூறுதும்:—

அர்த்தராத்திரிவியாபகமே முக்கியமாக வேண்டுமென்பது ஆகமாதிகளின் கருத்தாயின் இரவில் இரண்டாம் மூன்றும் யாமங்களே மகாநிசியென்றும் அதனுள்ளும் பதினைந்து நாழிகைக்குமேல் பதினேழரை நாழிகைக்குட்பட்ட காலமே மகாநிசியென்றும் அம்மகாநிசியின் மூன்றுங்கூற்றிற் சதுர்த்தசிவரினும் அதனையே கொள்கவென்றும் இவ்வளவு வற்புறுத்தி, இரவின்மத்திய இருயாமங்களையும் அர்த்தராத்திரியாகப் பாராட்டிக் கூறவேண்டுவதில்லையாகலானும், திதி விரதங்கட்கெல்லாம் அவ்வத்திதியந்தத்திற் பாரணஞ்செய்தல் வேண்டுமென்பதே விதியாகவும் ஆகமங்களினும்நாலாதரிசமுதலிய நூல்களினும் சிவராத்திரி யொழிந்தவைகட்கே இந்நியமமென்றுகூறி அனுட்டிக்குந்திதியாகிய சதுர்த்தசியிலேயே அச்சிவராத்திரிக்குப் பாரணம்விதித்தது நோக்கின் திரயோதசிக்கலப்புடைய முதற்றினங் கோடற்பொருட்டேயென்பது தெள்ளிதினறியக்கிடத்தலானும், திதித்திரயஞ் சேர்ந்துவருங்கால் வேறு தினமில்லையாகலின் அனுட்டித்தற்குரியதினம் அதுவேயாகவும் அதிலனுட்டித்தாலும் அமாவாசைசேர்ந்த தோஷநிவிர்த்திக்காக அகோராஸ்திர மந்திரத்தினால் சிவாக்கினியில் நூறு

முறை ஓமஞ்செய்யவேண்டுமென்று அவ்வமையினிழிவுதோன்றச் சுப்பிரபேதாகமத்தில் விதந்து கிளத்தலானும், திரயோதசியினந்தத்திற் சதுர்த்தசி கலக்கப்பெற்றதற்கு இத்தகைய நிசிதம் யாண்டும் காணப்படுதலின்மையானும், அர்த்தராத்திரிக்குப் பின் சதுர்த்தசிவரினும் திரயோதசிக் கலப்புடையதே சைவராதியர்க்குரித்தென்றும், அர்த்தராத்திரிக்கு முன் சதுர்த்தசி ஒருகலையளவேனும் வாராது பின்வந்து மறுதினம் அமாவாசையோடு கூடினும் பின்னிரவே கொள்வது வைதிகருக்கும் விரதருக்குமே யுரித்தென்றும், திதித்திரயஞ் சேர்ந்துவருவது அனைவர்க்கும் பொதுவென்றும், சைவராயுள்ளோர் அத்தினத்தில் அமாவாசைவந்து கலத்தற்கு முன்னரே பூசையைமுடித்து விடல்வேண்டுமென்றும் மேற்படி ஆகமபுராணாதிகளே விதித்தலானும், திரயோதசியோடுகலந்த சதுர்த்தசியே சர்வோத்தமமென்பது பெறப்படுதலான் அதனைச் சாதித்தற்குரிய வாக்கியங்களையே ஈண்டு முக்கியமாகக் கொண்டதென்க. இன்னும் விரிக்கிற் பெருகும்.

இனிமாதசிவராத்திரியாவன:—மாதந்தோறும் வரும் சிவராத்திரிகளாம். மாசிமாதத்தில் ஈண்டு விதந்து கூறிய அபரபக்கச் சதுர்த்தசியும், பங்குனியில் அபரபக்கத் துதியையும், சித்திரையில் அபரபக்கத் திரயோதசியும், வைகாசியில் அபரபக்கப் பஞ்சமியும், ஆனியில் பூர்வபக்கத் திரிதியையும், ஆடியில் பூர்வபக்க அட்டமியும், ஆவணியில் பூர்வபக்கத் துவாதசியும், புரட்டாதியில் பூர்வபக்கப் பஞ்சமியும், ஐப்பசியில் பூர்வபக்கச் சத்தமியும், கார்த்திகையில் இருபக்கத்து அட்டமியும், மார்கழியில் இருபக்கத்துத் துவாதசியும், தையில் பூர்வபக்கத்து அட்டமியுமாம். இம்மாத சிவராத்திரி மற்றொருவகையாகக் கொள்வதும் உண்டு. அவற்றை இதிற் சேர்க்கப்படும் சிவராத்திரிபுராணச் செய்யுள்களானுணர்க.

பக்ஷசிவராத்திரியாவது:—தைமாதத்து அபரபக்கப் பிரதமை முதல் பதின்மூன்றுநாள் ஒருபொழுதுண்டு விரதமனுட்டித் துப் பின்பு பூசித்தற்குரியதாகிய சதுர்த்தசி வரப்பெறும் பதினான்காநாளிரவாம்.

வாரசிவராத்திரியாவது:—சோமவாரத்துதயந்தொடங்கி விடியல்வரை அமாவாசை யிருக்கப்பெறுவது. சோமவாரத்தி ரவில் நான்குயாமமும் அபரபக்கச்சதுர்த்தசி யிருக்கப்பெறு வதுமாம். இவை யோகராத்திரியெனவும் பெயர்பெறும்.

நித்தியசிவராத்திரியாவன:—பன்னிருமாதத்து இருபக் கங்களினும் வரும் இருபத்துநான்கு சதுர்த்தசிகளுமாம். இவ் வைவகைச் சிவராத்திரியுள் ஈண்டுக்கூறிய மூன்றே மிகச் சிறத்தலின் இவற்றைமட்டும் இவ்வாசிரியர் தனித்தனி ஒவ் வோர் கற்பமாக விதந்து கிளந்தருளினரென்க.

## சரித்திரச்குறிப்பு.

சாகபுரத்தினது அயல்வனத்திலிருந்த அங்குலனென் னும் வேடன், ஒருதினம் வேட்டைமேற்கொண்டு நெடுந் தூரஞ்சென்று அஸ்தமிக்கும்வரையும் பற்பல தொழின்முயற் சிபுரிந்தும் விலங்கு பறவை யென்பவற்றுள் ஒன்றுஞ் சிக்கா தொழியப் பசியால்மிகமெலிந்து.இனி யாம் வெறுங்கையோடு செல்வதினும் இரவிலே தண்ணீர்பருகவரும் மிருகங்களைக் கொன்றேனும் ஊன்கொண்டுசெல்வதேநலமெனத்துணிந்து, ஆங்குள்ளமிருகங்களுக்கு அஞ்சுதலையுடையனாய் ஒருகுளக் கரையிலோங்கிய வில்வமரத்தி லேறியிருந்தனன். இருக்குங் கால், அதனடியருகில் ஒருமுனிவரால் பூசிக்கப்பட்டதொரு சிவலிங்கமிருப்பதும் அத்தினம் மகாசிவராத்திரிபுண்ணியகால மென்பதும் அறியானாய் மிருகங்களைக் கொல்லுதற்பொருட் டெய்யும் அம்புகளை இடையே தடுக்காவண்ணம் அம்மரத்திற்

செறிந்திருந்த தழைகளைக் கழித்து வீழ்த்தினன். அத்தழைகளும் நித்திரைவாராமைப்பொருட்டுப் பொழுதுபோக்காக அவனாற் கொய்தெறியப்பட்ட தழைகளும் அச்சிவலிங்கத்தின் திருமுடியிலேயே வீழ்ந்தன. அவன் பனித்திவலையின் மூழ்கினவனாய், உணவருந்திலனாய்த் துயிலொழிந்தவனாய் இவ்வாறு வில்வபத்திரங்களாற் சிவார்ச்சனைபுரிந்து தீமையற்ற தவமுடையனை ஒத்தனனாகலின் சிவாஞ்ஞைப்படி கணத்தலைவனாகிப் பின்னர் மேலுலகவின்ப முற்றும் நுகர்ந்து முடிவிற் சிவபதமடைந்தனன்.

சிந்துநதி தீரத்திலே குஞ்சரபுரியிலே அந்தணர் குலத்துதித்த சுகுமாரனென்பவன் ஆங்குள்ள கணிகையர்களையும் கற்பிற்சிறந்த மங்கையர்களையும் மயக்கிக் காமவின்பநுகர்ந்தொழுகுதலை அந்நகரையாளும் பரிபுரஞ்சயனென்னும் அரசனறிந்து நகரினீக்க; அவனொருவனத்தை யடைந்து, ஒரு புலைமகளைக் கண்டு காதலித்தனுபவித்தது மன்றி, அவள் பால் தன் சேர்க்கையி னுதித்த இருபுதல்வியர்களையும் அவளிறந்தபின் கூடியனுபவித்துக்கொண்டு, புலாலருந்தல் மதுப்பருகல் களவிற் பொருள்கவர்தல் ஆறலைத்து அந்தணராதியரைக் கோறன் முதலிய பாதகச்செயலையே புரிந்தொழுகினன். அக்காலத்திலே ஒரு சூரியகிரகணவேளையில், அரசன்பால் பற்பலதானமேற்றெய்திய அந்தணரொருத்திப் பொருளபகரித்தமை காரணமாகத் தன்னைப்பற்றுவான் அவ்வரசனேவலர் அணுகுவதறிந்து, புதல்வராதியரோடு ஊணதேயத்துள்ள ஓர்மலைச்சாரலை அடைந்துறைந்து, ஒருநாள் அருகே நாகநகரத்தில் விளங்கும் நாகேச்சுரர் நந்தனவனத்தின் மலர்களைக் களவிற் கவர்வானெய்தி, அத்தருணம் மகாசிவநிசித் தீபாராதனைசமயமாக இருந்தமையின் ஆங்குநிகழ்ந்த நடனகீத முதலியவற்றை விரும்பி யுட்புகுந்து, சிவலிங்கப்பெருமானை

யுந் தரிசிக்கப்பெற்று, அப்புண்ணிய விசேடத்தால் தேகநீக்கத்தில் சிவகணத்தவருளொருவனாயினன்.

இவ்விருசரிதமும் சிவராத்திரிபுராணம் கந்தபுராண உபதேசகாண்டம் முதலியவற்றுள்ளன. இவற்றை மகாசிவராத்திரி கற்பத்தின் (ருரு - ருசு - ருஎ) வது செய்யுளின்கீழ்ச் சேர்த்துக்கொள்க. இன்னும் இச்சிவநிசியிற் பேறுபெற்றோர் சரித்திரம் ஈண்டுக்கூறிய இருபுராணங்களினும், மற்றும் பிரமோத்தரகாண்டம் கடம்பவனபுராணம் சிவரகசிய மாதியவற்றினும் தலபுராணங்களினும் பற்பலவுள. ஆங்காங்குக் காண்க.

சிவராத்திரிகற்பசூசனம் முற்றிற்று.

---

சிவமயம்.

# *சிவராத்திரிமான்மியச்சருக்கம்.

சொன்ன சூதனை நோக்கியவ் வனத்துறை துறவர்கண் மறைகூறு, மன்ன மாவிர தத்தினை நோற்றிடு மடைவுமன் றரன்றுளிற், பன்னு மாமல ரிட்டருச் சனைபுரி பரிசுநீ பரிவோடின், றின்ன வாறென விரித்தெமக் குரைத்தியென் றிரப்பவங் கிசைக்கின்றான். க.

மாக மாமதிச் சிவநிசி யுற்பவம் வகுத்துரைத் தனமிப்பா, லாக வத்துட னைந்துள தரனிரா வவற்றைநீ ருணர்வீரால், யோக ராத்திரி சோமவா ரத்தினன் றுதயகா லையிலேதொட், டேக மாகவந் நிசிக்கடை யளவுவா விசைந்திடி லிதுவாமே. உ.

---

* இது சிவராத்திரிபுராணத்திலுள்ளது, விளக்கத்தின்பொருட்டு ஈண்டுச் சேர்க்கப்பட்டது.

திங்க ளின்கலை குறைசதுர்த் தசிமதிக் கிழமையிற் றிக
ழல்லிற், றங்கு சாமநான் களவுதொட் டிருந்திடிற் சயிலமீன்
றருண் மானைப், பங்கில் வைத்திடும் பரமனைப் பூசனை பண்
ணுக பரிவோடு, மிங்கு ணைத்தவா கமங்கண்மற் றிதனையும்
யோகராத் திரியென்றே. ங.

ஈறு வந்தசா மத்தனை நாழிகை யிருளுவா விருந்தாலுந்,
தேறு கின்றவச் சதுர்த்தசி யப்படிச் சேரினுங் கொளல்வே
ண்டு, மூறு தீர்தவத் துறவிர்காள் விதிமுறை யுரைக்குமிங்
கிவ்வநோற்கிற், கூறு மற்றுள சிவநிசி விரதமுக் கோடிநோற்
றிடலொக்கும். ச.

பருவ மாறுள வருடமோ ரொன்றுறு பன்னிரு மதிதோ
று, மூருவ மாமதி நிறைந்தது குறைந்திடு மோரிரு பக்கத்து,
மருவு மாசதுர்த் தசியறு நான்கினு நோற்பது வழக்காகுந், திரு
வ மர்ந்தமா தவரிதை நித்திய சிவநிசி யெனச்சொல்வார். ரு.

அதிக மாகமா தத்தினிற் குளிர்கதி ரம்புலி குறைபக்கத்,
திதிபன் னான்குமீன் றிங்கண்முற் றிரிதியை சித்திரை மதி
தேயு, மதியி னட்டமி யிடபமா தத்துமுன் மருவுமட் டமிமா
சில், பதிக யாழ்மதி மதிவளர் சதுர்த்தியாம் பகர்ந்தகற் கட
கத்தில். சா.

விரியும் வெண்ணிலாக் கலைகுறை பஞ்சமி விளங்குமா
வணிதன்னிற், பரியுஞ் சக்கில பக்கவட் டமிபுரட் டாதிமுற்
பதின்மூன்று, மரிய வைப்பசிக் கம்புலி வளர்திதி யாறிரண்
டறைதேளிற், றெரியு முற்படு சத்தமி பிற்படு திதியிலட்
டமிதானும். எ.

ஒப்பின் மார்கழி யுப்பயபக் சத்தினி லுறுதிதி பதினொன்
குஞ், செப்பு மான்மதி வளர்மதி தனிலுறு திரிதியை யிவை
குலக், கப்பு வேற்கரக் கண்ணுத லருச்சனைக் குரியவா கம

மெல்லாந், தப்பி லாதெடுத் திசைகொண்மா தச்சிவ நிசியெ
னச் சாற்றும்மே. அ.

மாறின் மார்கழிச் சதுர்த்தசி யாதிரை மருவிலுத் தம
மாகு, மூறி லாக்குடத் திங்களிற் குளிர்கதி ருடுபெதி குறை
பக்கந், தேறி நின்றிடு சதுர்த்தசி குசன்கதிர்க் கிழமையிற்சேர்
வுற்ற, வீறி னற்கதி கொடுக்குமுக் கோடியாஞ் சிவநிசிக்
கிணையாமால். கூ.

உற்ற பன்னிரு மதியிலிவ் விரதநோற் றுளம்விழைந்
தனமுன்னாட், பெற்று ளோரயன் மாசியிற் கேசவன் பிறங்கு
பங் குனிதன்னிற், சொற்ற சித்திரைத் திங்களிற் பார்ப்பதி
சூரியன் விடைமாதத், தற்ற மற்றிடு மிதுனமா தத்தர னாடியிற்
குமரேசன். க0.

சிங்கத் தம்புலி கன்னியிற் சேடனிந் திரனெடுந் துலைத்
திங்க, டங்கு கார்த்திகை நாமக டனுமதி தனின்மனோன்
மணிதையிற், றுங்க மாரிமி விடபதே வன்பசுஞ் சுகமொழி
யுமைவாம, பங்கனீ டரு டந்திடத் தக்கநற் பக்கராத் திரிசொ
ல்வாம். கக.

மகர திங்களி னபரபக் கதிதை வருபிர தமையெய்
தப், புகலு மன்றுதொட் டெதிர்ந்தபன் மூன்றுநாட் புசிப்ப
தோர் பொழுதாகிப், பகர்த ரும்பதி னான்கினி னேற்பது
பக்கராத் திரியாகு, மிகப ரந்தரு விரதமற் றிதற்கிணை யாவ
ரே புகல்கிற்பார். கஉ.

அருட ருஞ்சிவ ராத்திரி யிப்படி யைந்துபட் டதுவாகு,
முருகு காதலோ டைந்தையு நோற்றனன் றனைத்தவை முடி
யாதேன், மருவு மிங்கிதி னொன்றனை விதித்திடும் வரன்முறை
வழுவாமற், பெருகு மன்புட னேற்றவர் பெறற்கரும் பெருங்
கதி பெறுவாரால். கங.

(க0) அரன் - உருத்திரன்.

ஊதை முன்படு பஞ்சியி னுறுவினை யோட்டிமேற் பசஞ்சார்வான், கோதை பங்கன தருட்கடற் குளித்திடுங் கோதறுகுணத்தீர்கா, ளோதை யாமெடுத் துரைப்பதிங் குமக்கினி யிமையவ ரறியாரிப்,பேதை மானுட ரறிவரோ சிவநிசிப் பெருமையின் றிறனம்மா. கச.

## வே று.

மத்தகமால் களிற்றுரிவை போர்த்துழுவை யுரித்துடுத்து மதியஞ் சூடும், வித்தகனீ ணிறமிடற்றுச் சிவனிரவா கியவிரதம் விளங்க நோக்கி, லுத்தமமத் திமமதம மெனவொருமூவகைப்படுமா லொழுங்கிற் சொல்வன், முத்தழல்வேட் டிடுமுனிவீர் கேண்மினெனச் சூதமுனி மொழிவ தானன். கரு.

விரித்தசெழுங் கதிர்ப்பரிதி மேற்றிசைபோ யந்திவந்து மேவுங் காலுந், தெரித்ததிர யோதசியாந் திதிநின்று பின்புசதுர்த் தசிதான் கூடித், தரித்தவிரா வன்றிமற்றைப் பகன்முழுதுந் தங்கியிடிற் றறுகட் டந்தி, யுரித்தபிரா னிரசனிக்குளுத்தமத்தி லுத்தமா வுரைப்பர் மன்னோ. கசு.

உதித்தகதி ரத்தமித்த பின்கூடுஞ் சதுர்த்தசியுத் தமமாமென்பர், துதித்தவுத யாதியுத யாந்தமதாய்ப் பகலிரவு தோய்ந்து நிற்குங், கதித்தசதுர்த் தசிகதிரத் தமிக்குமுன்சேர் சதுர்த்தசிநற் கங்குற் போதின், மதித்தபத்து நாழிகையிற் பின்கூடுஞ் சதுர்த்தசிமத் திமமா மன்றே. கஎ.

அல்லினிரு பதுகடிகை யளவுசதுர்த் தசிதானின் றதற்குப் பின்னர்ச், சொல்லினுயர் மதிபரிதி யுடன்கூடுமமாவாசை தொட்டத் தோடு, புல்லியிடி னதமசிவ ராத்திரியா மெனவெடுத்துப் புகல்வ ரல்லி, னல்லியல்சேர் பதின்மூன்றாந் திதிதொட்ட சதுர்த்தசியே நன்ற தாமால். கஅ.

கங்குறனிற் பதின்மூன்ருந் திதியுடனே சதுர்த்தசியோர் கலைதான் கூடி, லங்கதுவே சிவநிசியாக் கொளல்வேண்டுஞ் சிவரூப மாகு மேன்மை, தங்குசதுர்த் தசிதிரயோ தசிசத்தி ரூபமிவை தாமெனன் ருகித், துங்கமுறக் கூடுமிராச் சிவலிங் கா காரமெனச் சொல்வர் மன்னே. ககூ

ஆசிலமா வாசைதொட்ட சதுர்த்தசிதா னுவியக லங்கம் போலாம், பேசுமதிற் பூசைசெய்யிற் பிரமகத்தி தோடமுண் டாம் பிறங்கு மந்தத், தேசமுழு வதுங்கெடுமுற் புண்ணியம் போஞ் சிந்தைசெய்யிற் றிடுக்கிட் டுள்ளங், கூசுநர கங்கட மிற் கொடியவிர வுரவமதிற் குளிப்பர் மாதோ. உ௦

ஊறிலமா வாசைதொட்ட சதுர்த்தசிவை திகர்விரதத்தர்க் குரியவாகுங், கூறுபுகழ்ச் சைவர்முன்னுட் கொளல்வேண்டுந் திருவோணங் கூடி நிற்கு, மாறிலமா வாசைதொட்ட சதுர்த் தசிதான் விரதருக்கும் வாழ்வின் மிக்க, தூறில்கிர கத்தருக்கு மாகுமமா வாசையெனுந் தோடமின்றே. உக

அற்றமிலத் தராத்திரிமுன் சதுர்த்தசியோர் கலைகூடி லன்று கொள்க, செற்றமிலச் சதுர்த்தசிநள் ளிரவினிற்பின் னொருகலைதான் சேடித் தற்ருன், மற்றைநாட் கொளல்வே ண்டும் வைதிகரும் விரதர்களு மதிக்கும் பக்க, முற்றதுதா னிரண்டுபெடி லிரவிலதி கத்திதிதா னுசித மாமே. உஉ

திதித்திரயஞ் சேர்ந்துவரில் வைதிகர்க்குஞ் சைவருக் குஞ் சிறந்த தாகு, மதிக்குமற்றை நிசிக்கடையி னமாவாசை கூடுதென்முன் மழுமா னேந்து, நதிச்சடையோன் றனைப்பூசை புரிந்திடுதல் சைவருக்கு நன்ரு மென்றே, விதித்தனரான் மதிக்கிழமைச் சதுர்த்தசிக்கு மிந்தமுறை வேண்டுந் தானே.

அற்றனின்மூ வைந்துகன்ன லாமளவிற் சதுர்த்தசிமுற் றினத்திற்கூடி,மற்றைநா ளிரவுபதி னைந்துகன்ன லளவிலுவா

வந்தொன் ருகி, யுற்றிடிற்பிற் றினந்தனிலே பூசைபுரிந் திடலாகா தொழிக முந்தச், சொற்றதினைத் தருச்சனைசெய் திடவிதித்தார் சைவநெறித் துறைநின் ரேரே. உச.

முற்றிதியி லோர்பொழுதுண் டிடையில்விதித் திடுந்திதியின் முழுது முண்ணு, திற்றிதனிற் றுயிலொருவி யேறெறிதனைப்பூசித் தியாம நான்கும், பிற்றிதியிற் சிவனடியார்க் கன்னநல்கிப் பாரணந்தான் பின்னர்ச் செய்யச், சொற்றிடுமா கமமாதச் சிவநிசிநோற் றிடக்கருதித் துணிந்து ளோர்க்கே. உரு.

ஓதவருஞ் சோமசிவ நிசிதனக்குச் சதுர்த்தசியி னுண்டுவாவிற், ருதவிழ்பூங் கொன்றையணி வேணியனைப் பூசைசெய்து சாமநான்குந், தீதகன்ற பிரதமையிற் பாரணஞ்செய் திடவேண்டுஞ் செப்பு மைந்து, பேதமுள்ள சிவநிசிக்குட் சதுர்த்தசிசங் கரனிரவாய்ப் பிறங்கி நின்றால். உசு.

இன்னசிவ நிசிவிரத நோற்றிடுவோர் முற்றினத்தி லெய்தாநின்ற, வன்னதிர யோதசியி லொருபொழுதுண் டரிவையர்தோ ளணைத லின்றிச், சொன்னவிர வகற்றியற்றை வைகறையிற் புனிதநதித் தோயத் தாடிப், பின்னர்தின மணியுதிக்குங் காலையிற்செய் கடனனைத்தும் பிறழா தாற்றி. உஎ.

மதிமுடியோன் கோயிறனை வலம்வந்து தண்டனிட்டு வணங்கி வாயாற், றுதிபுகன்றில் வயினேகி யிழிகுலத்தோர் பாதகர்பாற் றுன்னி டாமற், கதியறுமற் றவருடன்வாய் பேசாமற் கண்ணினெதிர் கண்டி டாம, னதியிடைப்போய் நண்பகலி னனவிதி வழுவாது நன்னீ ராடி. உஅ.

தூய்யவெண்டு கிரண்டுடுத்திட் டுச்சியிற்செய் கடன்கழித்துச் சுடலை யாடு, மையனைப்பூ சிக்குமிடங் கோமயத்தான் மெழுகியபின் னம்பொன் றுடை, செய்யதுகி னேத்திரத்தால்

விதானித்து வாழைகன்னல் சிறக்க நாட்டி, மையகலுண் மலர் மாலை தோரணங்க ணிரைநிரையின் வயங்க நாற்றி. உ௯.

கண்ணுதலை யருச்சித்தற் குரியபொரு ளனைத்தினையுங் கருதித் தேடி, விண்ணுலவு கதிரருக்கன் மேற்றிசைவே லையின்முழுக வீழும் வேலை, தண்ணுலவு சந்தனநற் றூபதீ பாதியிம சயில மீன்ற, வொண்ணுதலோர் பாகனுறை சந்நிதியின் முன்னமிவை யுதவி யன்பால், ௩0.

அந்தியினிற் றண்புனறோய்ந் தருக்கியநற் கிரியைசெப மாற்றிப் பின்னர், வந்திளமா மதிமுடித்த வள்ளறனைப் பீடிகையில் வைத்துத் தாபித், திந்தியமோ ரைந்தவித்திட் டாகமநூன் மறைகளெடுத் தியம்பா நிற்கு, முந்தியமந் திரங்களினாற் பூசைவிதி வழுவாமன் முடித்தல் வேண்டும். ௩௧.

முன்னமுதற் சாமத்தி லானினைந்தா லாட்டிடுக முறைமை யாகப், பின்னரிரண் டாஞ்சாமத் தைந்தமிர்தா லாட்டிடுக பிரசந் தன்னு, னன்னயஞ்சேர் மூன்றாய சாமத்தி லாட்டிடுக நாலாஞ் சாமங், கன்னலின்சாற் றினிலாட்ட காரணவா கமமெடுத்துக் கழறிற் றன்றே. ௩௨.

ஆசகல்கோ சலந்தயிர்பால் கோமயநெய் கௌவியமைந் தாகுஞ் செந்தேன், காசகல்சர்க் கரைததிபா னெய்யிவையைந் தமிர்தமெனக் கரைவ ரித்தை, மாசகல்கௌ வியம்போலத் தனித்தனியே தாபித்து மதியஞ் சூடு, மீசன்மணி முடிமீதி லாட்டிடவா கமநூல்க ளெடுத்துக் கூறும். ௩௩.

சந்தனமுற் சாமமதி லகிலிரண்டாஞ் சாமமதிற் சாமமூன்றிற், கந்தமிகுங் கருப்பூரங் கடைச்சாமங் குங்குமஞ்செங் கமலப் போதில், வந்தருணன் முகன்முகுந்தன் மகபதிவா னவரெவரும் வணங்கியேத்து, மந்தமிலா முழுமுதல்வன் றிருமேனி குளிரமிகு மன்பிற் சாத்தி. ௩௪.

முற்சாமம் வில்வமதிற் பிற்சாம முளரிமலர் மூன்றாஞ் சாம, நற்சாதி மலர்நாலாஞ் சாமமதி னந்தியா வர்த்தப் பூக் கொண், டற்சாருங் களத்திறைக்குச் சாத்துகவென் றுகமத்து ளதிக மான, சொற்சார முள்ளசித்தத் தந்திரநூ ரூகுத்தி தனைக் சொன்ன தாமால். ௩௫.

முண்டகமுற் சாமமதிற் றுளசியிரண் டாஞ்சாம மூன்றாஞ் சாமங், கண்டகஞ்சேர் கூவிளமுத் தளக்கினைநான் கெனப்பகுத்த கடையிற் சாமம், விண்டலர்ந்து மதுத்துளிக்கு மூற்பலத்தின் மலர்சாத்த வேண்டுமென்றே, யண்டரெலாம் புகழ்ந்தேத்துஞ் சிந்தியமா மாகமநூ லறைந்த தன்றே. ௩௬.

வில்வநொச்சி மாவிலங்கை முட்கிளுவை வெள்ளில் பஞ்ச வில்வ மாகச், சொல்வரிவற் றின்றழைமுக் கிளையாகக் கொண்டயன்மா றூடார்ந்துங் காணு, நல்வரதன் றிருமுடியினுன்குசா மமுஞ்சாத்த நன்று மீது, கல்வியறிந் தவருணரக் காரணவா கமமுறைத்த கருத்தா மன்றே. ௩௭.

எதமின்முற் சாமமுற்கப் பருப்பொடன்ன மாகுமற்றையிரண்டாஞ் சாமந், தீதகல்பா யசமாகுஞ் சாமமொரு மூன்றதனிற் றிலஞ்சே ரன்ன, மோதவரு சாமமொரு நான்கதனிற் சுத்தான்ன முரைத்தார் பூத, நாதனிவே தனந்தனக்குச் சுத்தான்ன மாஞ்சாம நான்கிற் கும்மே. ௩௮.

சறுவஞ்ஞனே யுக்கிரனே சங்கரனே சிவனேசாம் பவனே சான்றாய்ப், பெறுகதியை நல்கியிடு மீசானனே மகவுக்கிரனே பேசு, மறுவறுபூ தாதிபதி யேயென்னு மந்திரமோரெட்டு மோதி, யுறுதியுடன் றூபாதி நிவேதனங்க ளனைத்தினையு மொழுங்கிற் செய்தே. ௩௯.

நாமத்தி னிருக்கெனுஞ்சொன் ஞட்டுமறை முந்தவந்து நண்ணுஞ் சாமந், தோமத்தி னகற்றிரண்டாஞ் சுருதியிரண்

டாஞ்சாமஞ் சொற்ற மூன்றுஞ், சாமத்திற் சாமமறை யீற்றி லுறு மறைநாலாஞ் சாமுந் தன்னி,லீமத்தி னின்றுடு மாதிதிரு முன்னோதி யிருகை கூப்பி. ௪0.

உருகுமுளத் துடனிருந்தா னொருவியிரு விழிதனிலு முறக்க மின்றி, யிருளுறுகங் குலின்யாம நான்கினுமிப் படி யருச்சித் திறுதி தோறும், பொருவிலருக் கியங்கொடுத்து நாயடியேன் புரியுமிந்தப் பூசை தன்னைத், திருவுளத்தி னயந் தருள்வா யெனத்துதித்துத் தண்டனிட்டுத் திருமுன் வீழ்ந் தே. ௪க.

இன்னணநற் சிவபூசை யியற்றியற்றைப் புலரிதனி லெ ழுந்து போகி,நன்னதியிற் புனலாடிக் காலையிற்செய் கடன்கழி த்து நவின்ற வாறே,யன்னதினத் தினும்பகற்போ தரனையருச் சித்ததற்பி னாதி தீக்கை,சொன்னகுர வனைப்போற்றி யந்தண ருக் காடையன்னஞ் சொன்ன மீந்தே. ௪உ.

அங்கவர்த மனுமதியாற் பாரணஞ்செய் திடல்வேண்டு மற்றை வைகற், றங்குபகற் கடனனைத்துங் காலசந்தி யுடன் முடித்துத் தாழுங் கீழ்பாற், செங்கதிர்வந் துதித்தாறு கன்ன லுக்குட் பாரணந்தான் செய்தா ராகிற், றுங்கமுறு கவளமொ ன்றுக் கனந்தபல முளதெனநூல் சொல்லு மாறோ. ௪௩.

அலைசெறிபாற் கடல்விடமுண் டருள்வான்முப் புரந்தழ லுக் களிப்பான் மேருச், சிலைகுனித்த சிவனிரவிப் படிநோற் போர் சிவகதியிற் செல்வ ரன்றிக், கலைமுழுதுங் கற்றுணர்ந்த மாதவத்தீ ரன்னவர்முற் கருவின் மூவேழ், தலைமுறையி லுள் ளவருஞ் சத்தியமுத் தியிற்சேர்த றப்பி டாதால். ௪௪.

அறைமறைமந் திரவிதியா லருச்சிக்க விரகிலரே லன்ப ருள்ளத், துறைபரம னைந்தெழுத்தை யுச்சரித்தீ ரெட்டுவகை யுபசா ரத்தாற், பொறைதருமன் புடன்பூசை புரிந்திடுக

பொறியளிகள் பூந்தா தூது, நறைகமழ்செங் கமலமலர் நான் முகத்தோன் பூசையினு நயப்ப னம்பன். சரு.

இத்தகைய சிவார்ச்சனைசெய் திடமாட்டார் விருத்தர் கொடி யிடையார் நோய, ருத்தமநற் சிவநிசியி லூனுேடு துயி னீத்துச் சாம நான்குஞ், சித்தமிகக் களிகூர்ந்து சிவபுராணங் கேட்டுச் செபங்கள் பண்ணி, முத்தனுறை சினகரத்திற் சென் றரனைச் சேவித்தன் முறைமை யாமே. சசு.

அசிக்கணுமை பங்கனைமுற் சாமத்தி லருச்சித்தாங் கதற் குப் பின்னர்ப், பசிக்கழிந்தோர் நீர்சிறிது பால்சிறிது பருக வன்றேற் பழங்கள் சற்றே, புசிக்கசல பானநன்று மத்திமம் பால் பழமதமம் பொருவில் கந்தஞ், சுசிக்கொளப்பந் தோசை யிட்டு மாந்தலத மத்ததமஞ் சொல்லுங் காலே. சஎ.

பகர்தருபா ரணமுமுவாப் புணர்ந்திடுமுன் பலன்கொள் சைவர் பண்ண வேண்டு, மிகறருமுப் புரமெரித்த பரமனுயர் சீர்த்திகளை யெடுத்து முன்னோர், புகல்சரிதை பாராட்டிப் பிற்பொழுது போக்கியெழு புரவித் தேரோ,னகல்பொழுதிற் கடன்கழித்துத் துயில்வரற்றை யந்தியன்ன மருந்த லாகா.

பாரணந்தான் புரிந்ததற்பின் பகற்பொழுதிற்சோம்பொடு கண் படைசெய் தாரே, லாரணங்கள் பயின்றகுல வந்தண ரைம் பதிற்றிரட்டி யாயி னோரைக், காரணமொன் றுமின் றிக் கொன்றகடும் பழியடைவர் கருதுஞ் சாந்திப்,பேரணங்கி லோமமறை விதிப்படியே புரியிலந்தப் பிழைபோ மன்றே.

முத்தியினை விரும்பிமுதற் சங்கற்பந் தவறாது மூவெட் டாண்டு, பத்தியுட னிவ்விரத நோற்றதற்பின் வேதியர்க்குப் பசுப்பூ தான நித்திலவெண் ணகைக்கன்னி தானமன்ன தான முட னிதிய நல்கிப், புத்திபுடன் சிவநிசியாம் விரதமொழி வதுவழக்காப் புகல்வர் மன்னே. ருo.

வேறு.

இந்நல் விரதந் தனைச்சிவ னந்திக் கிசைத்திட வுணர்ந்துசெங் கதிரோன், கந்தவேள் கதைக்கைக் காலன்விற் காமன் கடவுளர் கண்ணொரா யிரத்தோன், செந்தழற் கடவுண் மதிநிதிக் குபேரன் செப்பிய வரன்முறை நோற்றுத், தந்தம மனத்தில் விழைந்தன பெற்றுத் தகைபெறு தலைவரா யினரால். ருக.

என்றுரைத் திடலு நைமிச வனத்தி லிருந்தவ ரிருகரங் கூப்பி, நன்றுரைத் தனைநீ நானிலத் துள்ளோர் நவையறு சிவநிசி நோற்றிட், டொன்றுதற் கரிதா முத்திபெற் றவர்க ளுளரெனி லுரையென வுயர்ந்த, குன்றுறழ் தவத்துச் சூதமாமுனிவன் கூறுவன் கேண்மினென் றிசைப்பான். ருஉ.

சிவராத்திரிமான்மியச்சருக்க முற்றிற்று.

---

சிவமயம்.

# சோமவாரகற்பம்.

எல்லாந்தா மென்னவுறு மீச னிறைவியருள்
பொல்லார்நல் லாரெமக்கிப் போது. × க.

இனிச்சோம வார விரத மிசைப்பா
முனிச்சோம நாதனடி யும். உ.

உமையுடனே யொன்றி யுறுஞ்சிவன்பேர் சோம
னுமைசிவன்வா ரம்மதுவென் றோர். ௩.

---

(க) பொல்லார் - பொல்லாப்பிள்ளையார்; பொள்ளரென்பது ளஎவொற்றுமைபற்றிப் பொல்லாரென்றாயிற்று. உளியாற்செய்யப்படாதவரென்பதாம். எனவே, சுயம்புமூர்த்தியென்றபடி.

× நமக்குப் போது. என்றும்பாடம்.

எட்டெட் டருள்விளையாட் டீச னியற்றினனென்
றிட்டமுறக் கூறுமிய லின். ௪.

எக்கடவு ளோர்களினு மேற்றமிகுஞ் சோமசுந்த
ரக்கடவு ளுக்குரித்திஃ தாம். ௫.

ஆய்ந்தறிந்திவ் வார விரத மனுட்டிக்க
மாய்ந்துவிடப் பாச வலி. ௬.

கண்ணுதன்முன் கார்த்திகைமுற் சோமவா ரந்தன்னிற்
பண்ணுக சங்கற் பனை. ௭.

மற்றுமுள மாதமுதற் சோமவா ரந்தன்னிற்
பற்றுக சங்கற் பனை. ௮.

ஆண்டொன் றிரண்டாதி யாறிரண்டல் லாலென்று
மீண்டியற்று வாம்விரத மென்று. ௯.

விண்ணப்பஞ் செய்து விமல னிறைவினையு
மெண்ணியுளத் தின்கணுமுற் றின்பு. ௧0.

முந்திய சந்தி முடித்து முறையாமச்
சந்தி தனையுஞ் சமைத்து. ௧௧.

கூவிளத்தின் மண்கோ மயமெள் குசையறுகு
மேவமுறை யிட்டுடலின் மேல். ௧௨.

உத்தம தீர்த்தத்தின் மூழ்கி யுகளவெள்
வத்திரம் வீக்கிவர முற்று. ௧௩.

முடித்தந்தி சந்தி முனிந்தைம் புலனு
மொடித்தைந் தெழுத்தையுளத் தோர்ந்து. ௧௪.

இந்த விரத மிடையூ றறநிறையத்
தந்திமுகன் பூசை சமைத்து. ௧௫.

சிவனையருச் சிக்க சிவராத் திரிபோற்
சிவவாக் கியமுந் தெரிந்து. ௧௬.

ஐந்துமுக மைம்மூன்று கண்ணை யிருபுயமுஞ்
சிந்தனைசெய் துள்ளிலிங்கத் தின். ௧௭.

திருவுருவந் தெண்பளிங்குஞ் செஞ்சடையி னிந்து
மருவுமிரு பாதமுமற் றும். ௧௮.

எண்ணுன் குறுப்பும் வயதெண் ணிரண்டுமுற
வெண்ணிச் சதாசிவருக் கே. ௧௯.

ஆட்டுகவா னைந்து மமிர்தவித மோரைந்து
மாட்டுகபான் முப்பழமு மார்ந்து. ௨௦.

ஆட்டுகபின் னெல்லிக்காப் பாதிசிறு குட்டறலு
மாட்டுகநெய்ச் சிக்குமற வாய்ந்து. ௨௧.

ஆட்டுகபின் னேல மளவிய சீதநீ
ரீட்டுநவ கும்பத் தினும். ௨௨.

துய்யநவ வத்திரத்தா லீரந் துடைத்திடுக
பைய மனுவும் பகர்ந்து. ௨௩.

சிறக்கவே யாவாக னாதியெலாஞ் செய்க
மறப்பை யொழித்தே மனத்து. ௨௪.

சாத்துகபட் டாடை தபனியப்பூ ணூலணியும்
வாய்க்க வணிக மகிழ்ந்து. ௨௫.

சாத்துக சாந்துபனி நீர்பளிதங் குங்குமமுஞ்
சேர்த்தியுளத் தாதரவு செய்து. ௨௬.

---

(௨௦) வாழைப்பழம் பலாப்பழம் மாம்பழமென்னும் முப்பழங்களையும் ரசபஞ்சாமிர்தத்துடன் கூட்டி, ஆட்டுவதுமுண்டு. எலுமிச்சம்பழம் நாரத்தம்பழம் தமரத்தம்பழம் குளஞ்சிப்பழம் மாதுளம்பழம் இவற்றைத் தனித்தனி ஆட்டுவதே விதி. அவை முக்கனியென நூல்களில் வழங்கப்படுதல்போல் இவை ஐங்கனியென வழங்கப்படும்.

வில்வமும் வெண்கமல மாதிவித வெண்மலரு
மல்கமுடி வைக்கமனு வால். ௨௭.

எழுத்தைந்து மந்திரத்து ளேற்றம்வில் வத்தின்
முழுக்கிளையும் பச்சிலையுண் முன். ௨௮.

பைசாசத் தும்பை பழிப்பென் றொழித்திடுக
பைசாச மெல்லாம் பழிப்பு. ௨௯.

நீர்ப்பூக் கொடிப்பூ நிவந்த மரத்தின்பூப்
பார்ப்பூவுஞ் சாத்தறிந்து பாங்கு. ௩௦.

அருச்சிக்க வாயிரம்பே ரால்வில்வத் தாலே
நெரித்த கிளை தன்னை நீத்து. ௩௧.

பாயச நெய்சர்க் கரைபயின்ற பாகவிதந்
தூயவன் முன்னே தொகுத்து. ௩௨.

பொரித்த கறியு மபூப விதமு
நிரக்க வதன்மே னிறைத்து. ௩௩.

செய்க நிவேதனந் திவ்விய முத்திரையாற்
பைய மனுவும் பகர்ந்து. ௩௪.

பாத்திய மாதி பகர்விதியாற் றூபாதி
வாய்த்துறவே செய்க மதித்து. ௩௫.

பவானிபவ னென்று பகரிருபத் தாறும்
பவானி பவனுக்குப் பாங்கு. ௩௬.

பாதங் கணைகாலு ஊருப் பரியவரை
யோர்தலுறு நாபியுர முமம். ௩௭.

திரடோள் களம்வாய் சிறந்தகுள முச்சி
யுருமுழுது மர்ச்சிக்க வோர்ந்து. ௩௮.

அணிக வதன்பி னறுகரிசி வில்வ
மெணியஞ் செழுத்து மிறைக்கு. ௩௯.

அதன்பினருச் சிக்கவீ ராறு மனுவா
லதன்பினீ ரெட்டுமனு வால். ௪௦.

எட்டுட னான்குமா தேவாதி யாகுமீ
ரெட்டுஞ் சிவாதியென வெண். ௪௧.

இயற்றுக மற்றை விதியினை யெல்லா
மயர்ச்சி மனத்தி லறுத்து. ௪௨.

ஒன்றாய்ச் சிவஞ்சத்தி யென்றிரண்டா யுற்றபிரு
ளொன்றுமுள னாயிரண்டற் றே. ௪௩.

நிற்பானே போற்றி நிலனிறுவாய்த் தத்துவத்து
நிற்பானே போற்றி நிறைந்து. ௪௪.

ஆக்கி நிறுத்தி யடக்கி மறைத்தருள்செய்
நோக்கினனே போற்றியுயிர் நோய்க்கு. ௪௫.

அனாதிமல முத்தனே யாதியந்த மில்லா
வனாதியே போற்றிசய வென்று. ௪௬.

துதித்து வலமாகச் சூழ்ந்து பணிந்து
விதித்ததிற மெல்லாம் விளைத்து, ௪௭.

வாக்கினாற் சொல்ல நினைக்க மனத்தினா
லாக்கையினாற் நீண்டவும்பெற் றாம். ௪௮.

எங்கெழிலென் ஞாயிறெமக் கென்ன குறைவிலோ
மிங்குமென வுள்ளத் தெணி. ௪௯.

இயற்றுகயா மந்தோறும் பூசையினை யீசர்க்
கயர்ச்சியற முன்மறையி னால். ௫௦.

---

(௪௫) உயிர்களின் மும்மலநிவிர்த்திப்பொருட்டு ஐந்தொழில்செய்பவனென்பது.

மற்றையநாட் சந்தி யிரண்டினையும் வாய்க்கவே
முற்றிக் குரவனடி முன். ௫௧.

பணிந்தலர் தூவியவன் பாதந் தலைமே
லணிந்தவனாற் பெற்றே யருள். ௫௨.

இட்டப் படியருத்தி யந்தணர்க்கு மீசனுக்காட்
பட்டதவத் தார்க்கும் பரிந்து. ௫௩.

அருந்துவித்தே யாதுலர்க்கு மற்றை யவர்க்கு
மருந்துகதாம் பின்னை யனம். ௫௪.

அதன்பின்பு தூஞ்சா தமலன் புராண
விதந்தன்னைக் கேட்க விழைந்து. ௫௫.

இயற்றினர் சங்கற் பனையளவு மிவ்வா
றயர்ச்சி மனத்தி லறுத்து. ௫௬.

சென்று சிவபுரத்துட் செல்வத் துடனிருப்பா
ரொன்றுமொழி யாதொடுங்கு நாள். ௫௭.

விடமூல கோயும் விமல மயமா
யுடனுறைவர் பேரின் புற. ௫௮.

தாமுள் ளளவுந் தவறா தனுட்டித்தார்
தாமமலன் றன்புரத்தைச் சார்ந்து. ௫௯.

அகர்த்தச் சிவன்கர்த்தா வஞ்ஞாதா ஞாதா
செகத்தினுதிப் புக்குமெனத் தேர்ந்து. ௬௦.

தம்முனிரண் டற்றவன் சாதகத மன்றனைக்குத்
தம்மைக் கரணமெனத் தாம். ௬௧.

தெருண்டிருந் தெல்லாச் செகமுமொடுங் கும்போ
திருண்டமல முந்திர வே. ௬௨.

---

(௬௧) சாதகதமந்தனக்கு என்பதும் பாடம்.

அறியா வளவிலாப் பேரானந் தத்தி
னொழியா துறைவ ருகந்து. ௬௩.

இவ்வா றியற்றவரி தென்னினித னின்னெளிய
வவ்வா றறிகவறை வாம். ௬௪.

முடித்தற் றையநாளைச் சந்தியொரு மூன்று
மொடித்து னுறக்க மொழித்து. ௬௫.

இயற்றிடுக வந்தரியா கம்யாமந் தோறு
மயர்ச்சி மனத்தி லறுத்து. ௬௬.

மற்றையநாட் பாரணத்தைச் செய்க விதிவழியே
யற்றிடுக துஞ்சுமவ லம். ௬௭.

இயற்றினர் சங்கற் பனையளவு மிவ்வா
றயர்ச்சி மனத்தி லறுத்து. ௬௮.

தீர்ந்திடுவர் தீவினைக ளெல்லாஞ் சிவபுரத்தைச்
சேர்ந்திருப்ப ரின்பந் திளைத்து. ௬௯.

பிறப்பரோ மண்ணிற் பிறவார் பெருநோ
யறுப்ப ரமலமய மாய். ௭௦.

இதுவு மரிதே லிதனி லெளிய
வதுவு மறிகவறை வாம். ௭௧.

முற்றியே யற்றைநாட் சந்தியொரு மூன்றினொடு
மற்றே நசியு ணது. ௭௨.

மற்றையநாட் பாரணத்தைச் செய்க விதிவழியே
யற்றிடுக துஞ்சுமவ லம். ௭௩.

இயற்றினர் சங்கற் பனையளவு மிவ்வா
றயர்ச்சி மனத்தி லறுத்து. ௭௪.

பாவ விதங்கள் பறிந்து விடப்பரம
தேவன் புரியைச் செறிந்து. எரு.

அங்குள்ள போக விதங்க ளருந்திடுவ
ரங்கரி தேதே யவர்க்கு. எசு.

கணிப்பரிய கற்பங் கழிய வதன்பின்
மணிற்பிறப்பர் முன்வரத்தால் வந்து. எஎ.

முடிப்பர்முன் சொன்ன முதல்விரதந் தன்னை
யொடித்தா ணுறக்க மொழித்து. எஅ.

பற்றுவ ரீசன் பரம சிவபுரத்தை
யுற்றிருப்பா ரின்ப முகந்து. எகூ.

பேரிலயந் தன்னிற் பிரியப் பெருநோயு
மோருருவ மாவர்சிவத் துற்று. அ0.

இதுவு மரிதே விதனி லெளிய
வதுவு மறிகவறை வாம். அக.

சந்தியொரு மூன்றுஞ் சமைத்து நிசிதன்னி
லந்தணர்க்கு மூட்டி யனம். அஉ.

அருந்துக சுற்றத் தவரோ டதன்பி
னருந்தும் விதியு மறிந்து. அங.

இயற்றினர் சங்கற் பனையளவு மிவ்வா
றயர்ச்சி மனத்தி லறுத்து. அச.

இருப்பர் பெருவளத்தோ டிப்பாரிற் பாவ
மரிப்பரதன் பின்சிவலோ கத்து. அரு.

சேர்வர் திளைப்பர் சிறந்தபல போகவிதஞ்
சார்வரதன் பின்னித் தலம். அசு.

இயற்றுவருண் ணுதமுறங் காதுமிறை பாசத்
தயர்ச்சியற வர்ச்சனையன் பால். ௮௭.

கட்டார்ந்த விண்டை கமழ்தூப மாதியான்
முட்டாம லென்று முடித்து. ௮௮.

சேர்வர் சிவபுரத்தி னின்பந் திளைத்திருப்பர்
சார்வரதன் பின்னமலன் றாள். ௮௯.

இதுவு மரிதே லிதனி லெளிய
வதுவு மறிகவறை வாம். ௯௰.

முடித்திரண்டு சந்திபகன் மூன்றைந் ததன்பி
னடித்திரும்பும் வேலை யறிந்து. ௯௧.

அருந்துவித் தன்பர்க் கதன்பி னுறவோ
டருந்துக தானு மனம். ௯௨.

இயற்றினர் சங்கற் பனையளவு மிவ்வா
றயர்ச்சி மனத்தி லறுத்து. ௯௩.

இட்டமுறப் பாரி லிருப்ப ரதன்பின்பு
சிட்டன் சிவலோகஞ் சேர்ந்து. ௯௪.

அங்குள்ள போக மருந்தி யதன்பின்பு
மிங்கே வருவ ரிழிந்து. ௯௫.

முற்றுவ ருண்ணு வுறங்கா முதற்பூசை
யெற்றுவர் பாச மெலாம். ௯௬.

செறிவர் சிவபுரத்தி னின்பந் திளைப்ப
ரறுவ ரிருளமலத் தாய். ௯௭.

முடித்திடுக சங்கற் பனைநாண் முடிவிற்
படித்த விதிவி தத்தைப் பார்த்து. ௯௮.

முடிக்கும் வினையிலைத்தம் மெய்ம்முடிவு காறு
மெடுத்தவிர தம்மியற்று வார்க்கு. கூகூ.

இடைவிடு வாரு முடிவியற்று ராரு
மடையார் பலமென் றறிந்து. க00.

இடையில் விடாதே முடிவு மியற்றல்
கடனே பலன்கொள்வார் காண். க0க.

ஒருபால் கனிட்டமுப் பாலுந் தமமே
யிருபான் கழிஞ்சிடையென் றெண். க0உ.

வெள்ளி விசிட்டம் விமலர் திருவுருவுக்
கல்லது செம்பினு மாம். க0ங.

ஒருமுகங் கண்மூன் றொருநாற் புயத்துத்
திருவுருவஞ் செய்கசிவ னுக்கு. க0ச.

மழுமான் வரத மபயங் கரத்தி
னெழுமதியும் பின்னுசடை யின். க0ரு.

உமைக்குந் திருமுக மொன்றுறு மேனி
யமைத்தோ ளிரண்டென் றறி. க0சா.

உற்பலந் தன்னை வலக்கையுற வோங்குவிக்க
மற்றையகை தாளொடுற வை. க0எ.

அருந்திப் பகலிலொரு போதருண வாரத்
தருந்தா திரவி லனம். க0அ.

மற்றையநாட் சந்தி யொருமூன்றும் வாய்க்கவே
முற்றிக்கா மாதி முனிந்து. க0கூ.

வேதா கமமுணர்ந்த வேதியனைத் தேசிகனைப்
பாதார விந்தம் பணிந்து. கக0.

செய்வித் தவனற் சிறக்கவிதி மண்டபத்தை
நெய்சமிதை மற்று நிறைத்து. ௧௧௧.

மண்டலமுஞ் செய்வித்து வன்னிக்கு நூல்வழியிற்
குண்டமுஞ்செய் வித்துக் குறித்து. ௧௧௨.

அருச்சித்து மண்டலத்திற் கும்பத்தி லல்லா
லுரித்தாஞ் சிவலிங்கத் தும். ௧௧௩.

ஆட்டுகவா னைந்து மமிர்தைந்து மார்வத்தாற்
சூட்டுகவில் வாதி தொடுத்து. ௧௧௪.

வைத்திடுக சந்நிதிமுன் செய்த வடிவிரண்டும்
பத்தியுற வேவிதியைப் பார்த்து. ௧௧௫.

ஆட்டிடுக விங்கு மா னைந்து மமிர்தைந்துஞ்
சூட்டுகவில் வாதி தொடுத்து. ௧௧௬.

இயற்றிடுக மற்றைய வெல்லா விணையு
மயர்ச்சி மனத்தி லறுத்து. ௧௧௭.

அங்கிதனி லாகுதியுஞ் செய்க வறிந்துவிதி
சங்கரற்கு மம்பிகைக்குந் தான். ௧௧௮.

நெய்சர்க் கரைநெய் நிறைந்ததிலம் பாயசம்பின்
செய்கவவை யாகுதிசெந் தீக்கு. ௧௧௯.

இயற்றிடுக யாமந் தொறுமிந்த வாறே
யயர்ச்சி மனத்தி லறுத்து. ௧௨0.

மற்றையநா ளிற்சந்தி யோரிரண்டும் வாய்க்கவே
முற்றி மொழியின் வழி. ௧௨௧.

ஆக்குவித்துக் கும்பம் பதின்மூன்று மின்பாலைத்
தேக்கி யவற்றுட் செல. ௧௨௨.

---

(௧௧௩) குண்டத்தில் என்பதும் பாடம்.

வைத்திடுக வேதிகையின் மேலிவ் விரண்டாகப்
பொத்திடுக வத்திரமன் புற்று. ௧௨௩.

மூங்கிலினாற் பெட்டி முடைவித் தவற்றன்ன
மோங்கப்பெய் தேகறிக ளும். ௧௨௪.

முன்னா ளுபவசித்த வந்தணர்முன் வைத்தவர்க்கே
யந்நாள் கொடுக்கபரி வான். ௧௨௫.

கொடுத்திடுக வெண்ணிறத்த கோதனமுந் நான்கொன்
றடுத்த பரிவோ டவர்க்கு. ௧௨௬.

தெண்டு கரகஞ் செருப்புக் குடைகொடுக்க
உண்டுசிவ னென்யார்க் குகந்து. ௧௨௭.

தேசிகனைத் தாள்பணிந்து செய்த திருவுருவந்
தேசிகனு லர்ச்சனைசெய் வித்து. ௧௨௮.

கொடுக்கவணி யோடே குரவனுக் கென்னை
யெடுத்தாள்வாய் கைக்கொள்க வென்று. ௧௨௯.

தேசிகனை யர்ச்சிக்க தேசிகன்றன் றேவியொடு
மீச னிறைவியிவ ரென்று. ௧௩0.

பட்டாடை யாபரணம் பாரூர் பரியிரத
மிட்ட முறக்கொடுத்தற் றின்பு. ௧௩௧.

கொடுத்திடுக கோதனமுங் கொம்புக்குப் பொன்னு
மடிக்குவெள்ளி தானு மணிந்து. ௧௩௨.

கஞ்சக் கலசங் கொடுக்க கறக்கப்பா
லஞ்சலெனுந் தேசிகனுக் கார்ந்து. ௧௩௩.

ஆக்கும் பலத்தைச் சிறக்கவம லர்க்கணிந்த
பூக்கமல மற்றும் புரிந்து. ௧௩௪.

உதவிடிற் றான முகந்தவற்றுக் கெல்லா
முதவலுமா மாறென் றுகந்து. கநரு.

ஏந்திழையார் தாமு மியற்றிடுக விந்நோன்பு
காந்த னனுமதித்தக் கால். கநசா.

தேசிகனை யின்றியே செய்யேல் பல்வேண்டிற்
றேசிகனாற் செய்கவிதி தேர்ந்து. கநஎ.

ஆயும் பிதாவு மமல னெனும்பழைய
தாயுங் குரவனே தான். கநஅ.

அவன்வாக் கியத்தை யனுதிமல முத்த
சிவன்வாக் கெனவே தெளிந்து. கநகூ.

விதியைப் பண்ணுக விடுக நிசிதம்
பதியை யடைவார் பதம். கச0.

அர்ச்சனையில் லாரணைத்து மந்தத்திற் செய்விக்க
சற்குரவன் றன்னாலே தாம். கசக.

திருமா லயன்றேவர் சித்தர் முனிவர்
தரணிமனு மற்றையருந் தாம். கச2.

முன்னந் தொடங்கி முடித்தார்க ளிவ்விரதந்
தன்னை விதியறிந்து தாம். கசஙு.

சிவராத் திரிசோம வாரசிவ பூசை
சிவவிரதந் தம்முட் சிறப்பு. கசச.

காசி மதுரைதிருக் காளத்தி மன்முரு
நீசரெலை யுள்விசிட்ட மே. கசரு.

வில்வத்தின் மிக்க விசிட்டமிலை பத்திரத்து
ளில்லை யலர்விதத்து மீங்கு. கசசா.

மரிக்குநாள் வில்வத் தடிமணுடற் பூசி
விருப்பர் சிவபுரத்துற் றின்பு. ௧௪௭.

மரிக்குநாட் காசி மதுராதி வைகி
விருப்பர் சிவபுரத்துற் றின்பு. ௧௪௮.

மரிக்கும்போ தன்னும் வடிவினை யாவி
பரிக்கு நினைவு பரித்து. ௧௪௯.

ஆதலினாற் சுற்றத் தவரைநினை யாதமலன்
பாத நினைக பரிந்து. ௧௫௦.

அப்பொழுது கேட்க வமலன்வே தாகமங்க
ளப்பா லுறச்சுற்றத் தார். ௧௫௧.

அப்பொழுது கேட்க வமலனருள் பெற்றவர்வாக்
கப்பா லுறச்சுற்றத் தார். ௧௫௨.

நனவிற் பயின்றதனை நாளு மாவி
கனவிற் பயிலுமே காண். ௧௫௩.

நனவென விம்மையினை நாடுக வம்மை
கனவெனக் காணவெணின் கண். ௧௫௪.

அனுபா டணைத்தறைந்தா மாக்கழுயிர் போய்போ
தினுமூற் றொடர்ச்சியிசைப் பேம். ௧௫௫.

தானே முளைக்கு மிலிங்கஞ் சயம்புவது
தானே வரந்தா வரத்து. ௧௫௬.

கூட்டுவித்தா ரவ்விலிங்கத் தவ்வாரத் தானைந்துங்
கூட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ௧௫௭.

அரிப்பருறும் பாவ மனைத்து மதன்பி
னிருப்பர் சிவபுரத்துற் றின்பு. ௧௫௮.

---

(௧௫௫) அநுபாவணம் - சொல்லிவந்ததையநுசரித்து மற்றொன்றைச்சொல்லுதல்.

ஆட்டுவித்தார் தாமு மமிர்தவித மைந்தினையுந்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. கருகூ.

ஆட்டுவித்தார் தாமிளநீர் முப்பழமு மார்வத்தாற்
றீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூ0.

ஆட்டுவித்தா ருஞ்சந் தனத்தினறுங் கற்பூரந்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூக.

ஆட்டுவித்தா ருங்கலச மாயிரத்தி னுதகந்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூஉ.

ஆட்டியரிட் டம்பட் டனைசாத்து வித்தாருந்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூங.

பூட்டுவித்தா ரும்பொன்னின் பூணு விழைவிதமுந்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூச.

கூட்டுவித்தா ரும்பளிதங் குங்குமஞ்சாந் தம்பனிநீர்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூரு.

சூட்டுவித்தா ரும்வில்வத் தின்றொடை மாலைகளுந்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூசு.

காட்டுவித்தா ருங்கமழுந் தூபதீ பாதிகளுந்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூஎ.

ஊட்டுவித்தா ருஞ்சாலி யோதனமு நெய்ப்பொரிப்புந்
தீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. ககூஅ.

வெண்மை யரிசி விதஞ்சால்பாம் வெண்மையினை
யன்மைவிதம் பூரியவா மால். ககூகூ.

கோதி யுழுந்து குளமிளகு சீரகநெய்
யாதி யபூபவமிர் தம். கஎ0.

(கஎ0) கோதி - கோதுமை.

விதியா னிவேதனஞ் செய்வித் தவரு
மதியா யமலனே யென்று. கஎக.

வெள்ளியகற் பூரந்தாம் பூல மிசைவித்த
வொள்ளியர் தாமு முகந்து. கஎஉ.

வெண்முத்தின் சத்திரமும் வெண்கவரி யோரிரண்டு
முண்ணயந்து செய்வித் தாரும். கஎங.

நாட்டுவித்தா ருந்திருமுன் னுடவுருக் கண்ணாடி
நீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. கஎச.

ஆட்டுவித்துக் கன்னியரை யாட்டுவித்தா ருந்திருமுன்
நீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. கஎரு.

பாட்டுவித்துக் கன்னியரைப் பாட்டுவித்தா ருந்திருமுன்
நீட்டும் விதிதன்னைத் தேர்ந்து. கஎசு.

தேசிகன் நீண்டுகை தெண்டாற் சிவன்முன்னே
வேசியர் கூந்தன் மிசை. கஎஎ.

நீண்டுதலாற் றெண்டாற் சிரோதண் டியரெனும்பே
ராண்டபிரான் றுதியருக் காம். கஎஅ.

தாளஞ் சுழன்மொந்தை தக்கை கிணைவீணை
காளங் கொடுத்தவருங் காண். கஎகூ.

பற்றுவர் முன்னம் பகர்ந்தபலம் பாவவித
மற்று விடுமே யவர்க்கு. கஅ0.

சென்றந்த வாரந் தனிற்சிரத்தி னல்வணங்கி
நின்றமல லிங்கத்தி னோர். கஅக.

கண்டு களிகூரக் கண்ணினாற் கண்டடி
கொண்டிதயத் துள்ளே குறிப்பு. கஅஉ.

---

(கஎஅ) சிரோதண்டியர் - சிரசில் தண்டம்வைக்கப்பட்டவர்.

ஆட்டிநீர் சந்துமணிந் தார்வத் தலர்சூட்டி
யூட்டிநல் லன்ன முகந்து. க௮௩.

கமழ்தூப மாதி யனைத்துங் கருத்தாற்
றிகழவே செய்க தெளிந்து. க௮௪.

அதன்பின்னர் முன்னரன்ன மாதி நிவேதித்
ததனை யருந்துகதா மார்ந்து. க௮௫.

இப்படியே நாடோறு முட்டா தியற்றினு
ரிப்படியி லின்புற் றிருந்து. க௮௬.

புக்குச் சிவபுரத்துட் போக விதமருந்தி
யெக்குணனு மெய்கண் டிருந்து. க௮௭.

எரிக்குநா ளீசனுல கெல்லாந்தம் பாச
மரித்தருந்து வார்பேரின் பம். க௮௮.

தானே முளைத்த சயம்பு முடிக்காட்டு
மானேந்து மன்பா லருந்து. க௮௯.

அற்றுவிடும் பாவவித மாகார தோடமு
மற்றுவிடு மென்றறிக வாங்கு. க௯0.

அந்த விலிங்கத்தி னாட்டிய நீரருந்த
வெந்தறும் பாவ விதம். க௯க.

அருந்துக வார்வத் தமல விலிங்க
மருந்திய சேட வனம். க௯௨.

தீர்ந்து விடவே திளைத்த சிறிதன்ன
மீர்ந்துவிடும் பாவ மெலாம். க௯௩.

அடைந்தந்த வாரத்தி னாலயத்தின் முன்னும்
படர்ந்தபுல்லு மற்றும் பறித்து. க௯௪.

---

(க௮௫) அதன்பின் முன்னிவேதிக்கப்பட்டுள்ள பொருள்களை அருந்துகவென்பது.

ஒறுப்புமற வூரு முயிர்க்சலகு மிட்டுக்
கறுப்பு மெடுத்துக் கழித்து. கககு.

நீராலுங் கோமயத் தாலுநிதஞ் சுத்திசெய்வோர்
சீரார் சிவபுரத்தைச் சேர்ந்து. கககா.

ஆண்ட வமல னருளாற் றிளைத்திருப்பர்
வேண்டிய போக விதம். கககஎ.

அணுவள வேதேனு மாதரவாற் கால
மெணியுதவிற் பல்கி யிடும். கககஅ.

பருதியுப ராகம் விதிபாத மாதி
கருதுங்காற் காலத்துட் கற்பு. கககக.

அறிந்துவிதி காலவித மாதரவி னேடே
சிறந்த சிவதருமஞ் செய்து. உ00.

ஈண்டு மடைந்தார்த மிட்ட பலம்பலரே
யாண்டுமடைந் தாரிட்ட மார்ந்து. உ0க.

விதிகாலம் பாத்திர மாதரவு வீறூர்
பதியும் பெரும்பயனின் பாங்கு. உ0உ.

கற்றறிந்திக் காரணங்கள் செய்தார் கருமங்கள்
பற்றிடுவ ரிட்ட பலம். உ0ங.

கற்றுணர்ந்தா ரிந்நூலைக் காசினியுள் வாழ்ந்ததன்பி
னுற்றிருப்பர் சைவபுரி யுள். உ0ச.

இந்த விரதத் தியல்பியம்பக் கேட்டவர்தா
மந்தவரன் கிங்கரரா வார். உ0டு.

பரிவுறப்பார்த் தாரும் பரித்தவரும் பின்கேட்
டிரவியற்றும் பூசை யிறைக்கு. உ0சா

(ககக) உபராகம் - கிரகணம்.

(உ0உ) பாத்திரமாவார் - பாவத்தினின்று மெடுத்துப் பரமபதத்தினிலே பெறுவிப்பவர்.
பா - பாவம்; திரம் - அதினின்றெடுத்து நிலைபெறுவித்தல். பதி - க்ஷேத்திரம்.

(உ0டு) கிங்கரர் - ஏவலர்.

இந்திர லோகத் திருப்பர் பதினால்வ
ரிந்திரர்தா மெல்லாமுற் றின்பு. உ0எ

எழுதி யிதழினு மிந்நூலை மையா
லழகுறச் செய்தா ரவர். உ0அ.

மண்ணுலகில் வாழ்வர் மகிழ்ச்சியுறப் பின்றிளைப்பர்
விண்ணுலகிற் போக விதம். உ0கூ.

ஆத்திகருக் கிந்நூ லறைகவறி விக்கவலர்
பாத்திர மென்று பரிந்து. உக0.

நாத்திகர் முன்னே நவிலே லறிவியேல்
பாத்திரமன் றென்றவரைப் பார்த்து. உகக.

உண்டு வினையு முயிர்க்கு வினையூட்டு
கண்டனுமென் பாராத்திகர். உகஉ.

உண்டோ வினையு முயிர்க்கு வினையூட்டு
கண்டனுமென் பார்நாத்திகர். உகங.

நாத்திகர்க்குப் போதிக்கு நாத்திகரு நைந்தழிவர்
பாத்தி நிரயத்துட் பட்டு. உகச.

ஆத்திகர்க்குப் போதித்தார் தாமுமவ ராலறிந்த
வாத்திகரும் பாவவித மற்று. உகரு.

இருப்பர் சிவபுரத்த னின்புற் றளத்துட்
பரிப்ப ரமலன் பதம். உகசா.

சோமவாரகற்பம் முற்றிற்று.

---

(உகஉ) கண்டன் - கண்டித்தலுடைய தலைவன்.

சிவமயம்.

# சோமவாரகற்ப சூசனம்.

இச்சோமவாரவிரதம் சிவராத்திரிபோலப் பகல்முச்சந்தியு முடித்து இரவிலே நான்கியாமமும் பூஜோபகரணங்களைக் கொண்டு விதிப்படியர்ச்சித்து ஊணுறக்கமொழிந்திருந்து மற்றைநாட் சந்தியிரண்டையுமுடித்தபின், அந்தணர் அருந்தவராதியரை அமுதுசெய்வித்து அதன்பின்பு தான் சுற்றத்தவரோடிருந்து பாரணஞ்செய்து, நித்திரைவிடுத்திருப்பதும்; பகற்சந்திமூன்றுமுடித்து,இரவில் நான்கியாமமும் மானதமாகச் சிவபெருமானை வழிபட்டுக்கொண்டு ஊணுறக்கமொழிந்திருந்து, மறுதினம் முற்கூறியபடி பாரணம்புரிந்து, பகனித்திரையொழிந்திருப்பதும் ; பகற்சந்திமூன்றையுமுடித்து, இரவிலுமுணவொழிந்து,மறுதினம் முற்கூறியபடி பாரணம்பண்ணிப் பகல்நித்திரையொழிந்திருப்பதும்; பகல்முச்சந்திகளையுமுடித்து இரவிலே முற்கூறியபடி அந்தணராதியர்க்கு அமுதூட்டிச் சுற்றத்தவரோடருந்துவதும்; பகலிருசந்திமுடித்துப் பதினைந்துநாழிகைக்குமேல் நிழல்திரும்புஞ்சமயமறிந்து,அந்தணராதியர்க்கமுதூட்டிச் சுற்றத்தவரோடருந்துவதும் என ஐவகைப்படும். இவற்றினியல்பும் இவற்றிற்குரிய உத்தியாபனமும் அனுட்டிக்கவேண்டிய காலவரையறையும் அனுட்டித்தார் பேறும் அனுட்டித்தவர் இன்னவரென்பதும் இச்சோமவாரத்திலே சிவசந்நிதியிலியற்றுங் கைங்கரியப்பேறும் இக்கற்பத்தினும்; திருவிளையாடற்புராணத்தினும், மற்றும் பேறுபெற்றோர் சரித்திரங்களை உபதேசகாண்டம் பிரமோத்தரகாண்டம் கடம்பவனபுராணம் முதலியவற்றினுங் காண்க. விரிக்கிற் பெருகும்.

**சோமவாரகற்பசூசனம் முற்றிற்று.**

உ

சிவமயம்.

# வருத்தமறவுய்யும்வழி.

செம்பவள மெய்யன் சிவன்சுதனைங்கரனை
நம்பவள மாமே நமக்கு. க.

கருத்தினுங்கண் டீசனடி கட்டுரைப்பாம் பத்தர்
வருத்தமற வுய்யும் வழி. உ.

உதயத் தருக்க னுருவனைய லிங்க
மிதயத் தலர்மே லிருத்து. ங.

ஆட்டுகவான் பாலாதி பட்டணிந்தா ரக்குழம்புஞ்
சூட்டுகவில் வாதித் தொடை. ச.

நிகழுமரன் பாற்போன மாதி நிவேதி
கமழ்தூபந் தீபாதி காட்டு. ரு.

அஞ்செழுத்தாற் சொன்ன வனைத்தினையுஞ் செய்யடைவே
யஞ்செழுத்தே மந்திரமெல் லாம். சு.

பாவனையிற் பட்ட கருடனாற் பாம்பொழியும்
பாவனைமெய் செய்யும் பலம். எ.

---

(எ) கருடபாவனை-கருடதியானம். கருடதியானமாவது யாதெனிற் கூறுதும்:—ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், ஆத்தியான்மிகமெனக் கருடன்மூவகைப்படும். பொருடோறும் இவ்வாறு கண்டுகொள்க. அவற்றுள், உலகத்திற்காணப்படுங்கருடன் ஆதிபௌதிககருடன். அதற்கதிதெய்வமாகியமந்திரம் ஆதிதைவிககருடன், அம்மந்திரம் இடமாகநின்று மாந்திரிகனுக்குப் பயன்கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிககருடன் எனப்படும். அம்மூன்றனுள் ஈண்டுக்கருடனென்றது கருடனுக்கு அதிதெய்வமாய் மாந்திரிகனுள்ளத்தின் அதுபோல்வைத்துத் தியானஞ்செய்து கணிக்கப்படும் மந்திரரூபமாகிய ஆதிதைவிககருடனை. அதனைப்பாவித்தலாவது நாடோறும்பயின்றுவந்த பயிற்சிவிசேடத்தால் அம்மந்திரரூபமேதானாக அநன்னிய பாவனைசெய்து தன்னறிவு அதன் வயத்ததாம்படி உறைத்துநிற்றல். அவ்வாறுநின்று அம்மந்திரக்கண்கொண்டு பார்ப்பவே அஃதவ்விடவேகத்தை மாற்றுதல் ஒருதலையாகலின் அப்பாவனை ஈண்டைக்கு உவமையாயிற்று, புள்ளு விலங்கு மரமுதலியவற்

உள்ளேவல் செய்வாளைக் காந்தன் மிகவுவப்ப
னுள்ளேசெய் பூசை யுகந்து. ௮
அலலாக்கைக் கில்லை யருவருப்பு மில்லை
கொலையுமிலை யுட்பூசை கூடு. ௯
நெஞ்சத்துன் னிச்சிவன்ற னிண்டவடங் கைப்பூண்டே
யஞ்செழுத்தை நாவினுஞ்சொ லாய்ந்து. ௧௦
சிவன்சத்தி யான்மாத் திரோதந் திமிரஞ்
சிவமுதலைந் திற்சிந்தை செய். ௧௧
நெற்றிநடு மன்று ணிருமலன்ற னின்றாடும்
பற்றறுப்பா னுன்பாலன் பால். ௧௨
அருக்கன் சிவனென் றலரினா லர்ச்சி
யிருப்பாய் சிவபுரத்துற் றின்பு. ௧௩
தூவியினைக் கோபுரத்தை யீசனெனக் கண்டுதொழ
பாவமறும் வாய்த்துறுமின் பய். ௧௪
நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை
யென்றுஞ் சிவன்ற ளிணை. ௧௫
அரிப்பா யவல வினையனைத்து மார்வத்
திருப்பாய் சிவபுரத்துற் றின்பு. ௧௬
வருத்தமற வுய்யும் வழிமொழிக பத்தர்க்
கிரக்கத்தா லாசா ரியன். ௧௭

வருத்தமறவுய்யும்வழி முற்றிற்று.

---

றுக்கெல்லாம் அதிதெய்வமந்திரமுளவென்பதூஉம், மந்திரங்களைக்கணிப்போன் படிகம்போல மந்திர சொரூபி யாவனென்பதூஉம், சர்வஞ்ஞானோத்தரமுதலியவற்றுட் காண்க. என்றருளிச்செய்தனர் சிவஞானசுவாமிகள். இதனை "கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா, லண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த, வூனத்தைத் தான்விடா றுத்தமனி னெண்கழ—, ஞானத்திற் றீர்விடம்போற் றன்." என்னும் சிவஞானபோதத் திருவெண்பா வுரையினுணர்க.

(௧௧) சிவமுதலைந்தென்றது சூக்குமபஞ்சாக்கரத்தை. (௧௪) தூவி - தூபி.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# உருத்திராக்கவிசிட்டம்.

## காப்பு.

செக்க ரிரவித் திருவுருவ னானைமுகன்
விக்கினங்கள் வீட்டுந்தன் மெய்யன்பர்க்—கெக்கண்ணுங்
காட்டு மமலன் கமலவடி தன்கண்ணு
லோட்டுமல மூலத் துரம். ௧.

## சபாநாயகர்.

இயலின் வழிவழுவா தீசனையர்ச் சித்து
முயலு முனிவரர்முற் றேன்றி—யயன்முதலோர்
காணமணி மன்றுணட மாடுங் கடவுளடி
பேணிமற வாமலிருப் பேம். ௨.

## சிவகாமசுந்தரியம்மை.

பேருயிரு ணீங்காளைச் சிற்றுயிரைப் பெற்றுளைப்
பாரிறுவா யாக்கிப் பரித்தடக்கி—யாரருளுஞ்
செய்யுமக ளங்க சிவகாம சுந்தரிதாள்
கையினலர் தூய்ப்பணிவாங் கண்டு. ௩.

---

(௧) மலமூலத்து என்பதனை மூலமலத்து என மாற்றிக்கொள்க.

(௩) பேருயிர் = பரமான்மாவெனப்படும் சிவம்.

## விநாயகக்கடவுள்.

செய்யன் கரிமுகன்வெண் கோட்டன் றிகழைந்து
கையுடைய னன்ப ரிடர்கடிவான்—மையலினை
மாற்றுவான் பாதம் வணங்குவமெம் முள்ளத்துந்
தேற்றுவா மேலாஞ் சிவம். ௪.

## சுப்பிரமணியக்கடவுள்.

வதைத்துத் தயித்தியரை வானோர் துயரைச்
சிதைத்தவர்க்கு விண்ணளித்த தேவன்—மதர்த்தவிழி
வள்ளிமண வாளன் மலர்த்தா ளிணைபணிவாம்
விள்ள வினையாம் விடக்கு. ௫.

## நந்திதேவர் முதலியோர்.

நந்திபத நந்திமா காளர் நறுமலர்த்தாள்
பந்த விடையின் பதமலருந்—தந்தைபதந்
துண்டமிடு சண்டியடி யுந்தொழுவாந் தூய்மலர்கைக்
கொண்டுளத்திற் பேரன்பு கூர்ந்து. ௬.

## காரைக்காலம்மையார்.

அனைத்துயிர்க்குந் தோன்றாத் துணையமல னென்னு
நினைப்பொடுமெண் ணின்க ணிகழ்ந்து—வனத்தாலின்
மும்மலமு மெம்மைவிட முன்னோனை யாட்டுவித்த
வம்மையடி யெம்முடிவைப் பாம். ௭.

## திருஞானசம்பந்த மூர்த்திநாயனார்.

வெந்துறு மென்பை வியக்க வுலகெல்லாஞ்
சந்தவிய லாற்பெண் ணெனச்சமைத்தான்—வந்தெதிர்ந்த
சாவகரை வென்று தறிநுதியின் வைத்தவிறற்
சேவகன்றாள் வைப்பாஞ் சிரத்து. ௮.

(௫) வினையாம்விடக்கு - வினையாலாகியவுடம்பு.

## திருநாவுக்கரசு நாயனார்.

மன்னதிகை யீசன்முன் கூற்றா யினவாறே
யென்னுமிசை பாடி யிசையுடனே—யன்னவனு
லிந்நிலமேல் வாகீச னென்னும் பெயர்பெற்றான்
றன்னடிவைப் பாமெந் தலை. க,

## சுந்தரமூர்த்தி நாயனார்.

முதலை விழுங்கி முடிந்தன்றே போன
மதலைவரப் பாடியமெய் வாக்குக்—கதலிவனஞ்
சூழ்ந்ததிரு நாவலூர்ச் சுந்தரன்பா தந்தொழுவா
மாழ்ந்தழுந் தாம் யாங்களவ லத்து. க0.

## மாணிக்கவாசக சுவாமிகள்.

ஞானக் கணிஞலே நாடு சிவன்மனித
ரூனக்கண் காண வுலகிதனுண்—மானப்
பரிமேல் வரப்பனுவல் பாடினன்பா தத்தை
யுரிமையுற வைப்பா முளத்து. கக.

## நாயன்மார்கள்.

தன்கழுத்தைத் தானரிந்துந் தாரந் தனைக்கொடுத்து
மன்பருக்கு மைந்தன் கழுத்தரிந்தும்—வன்புறவே
கண்ணிடந்துங் கைதடிந்துங் காண்டற் கரியனடி
நண்ணினர்தா ளும்பணிவா நாம். கஉ.

## திருவிசைப்பாவருளினோர். மெய்கண்டதேவர்.

மதுரகவி மாளிகைத்தே வன்முதலோர் செய்ய
பதமலர்க டம்மைப் பணிந்தே—யிதமுறவே
தேங்குபுனல் வெண்ணெய்நகர் மெய்கண்ட தேவனடி
தாங்குவமெம் முள்ளந் தனில். கரு.

## வாழ்த்து.

மாதவரு மந்தணரும் வாழ்க மழைபொழிக
கோதனமும் வாழ்க குடிதம்மைத்—தாதையென
வோம்புமன்னர் வாழ்க வொறுக்குமன்ன ரற்றூரமுந்
தேம்புகவுய்ந் தோங்க செகம். கச.

## நூல்வந்தவழி.

புத்திக்கு முத்திக்கு மேதுமுனைப் புண்ணியர்க்குச்
சித்திக்குங் கண்டி யதன்சிறப்பைப்—பத்தரெணக்
கண்டுரைப்பா மாகமத்துங் காந்தபுரா ணந்தனினுந்
தண்டமிழ்வெண் பாவினாற் றான். கரு.

பாயிர முற்றிற்று.

---

## நூல்.

வானோர் வணங்கி மலவயிரி தாண்மலரிற்
றேனூர் நறுங்கொன்றைச் செஞ்சடையாய்—கானுடி
முப்புரத்தா ரெம்மை முரணழித்தார் மாலயனு
மப்புரத்தார்க் கொல்கினர்போ ரால். கசு.

அழித்தவரை யெல்லாமெம் முள்ளத்தி லல்ல
லொழித்தருள்செய் வார்மற்று முண்டோ—சுழித்தபுனல்
சூடிமார்க் கண்டேயன் றுஞ்சாமற் கூற்றுவனைச்
சாடிசாற் றுன்னையல்லாற் றான். கஎ.

என்றியம்பக் கேட்டிரங்கி யஞ்சேலஞ் சேலவரை
யன்றிப் பொருதழிப்பா மென்றருளிக்—கொன்றைமலர்
சூடினான் றுஞ்சா வரத்தார் தமைத்துணிக்க
நாடினா னத்திரமந் நாள். கஅ.

---

(கஅ) அன்றி - பகைத்து.

அம்பகங்கண் மூன்றினையு மாங்கலர்த்தித் தானமர்ந்தா
னும்பரவ ராண்டா யிரமுற லு—நம்பன்கண்
ணீருதித்த தந்நீரிற் கண்டி மரநிகழ்ந்த
தாருதிக்க வுய்வா ரகத்து. கக.

கலித்ததருக் காம்பகத்தி னீரிற் கபிலை
கலித்ததுவெண் கண்டிமதிக் கண்ணிற்—கலித்தநீர்
தன்னிற் கரியவுருக் கண்டி தழல்விழிநீர்
தன்னிலுதித் தோங்கிற்றுத் தான். உ௦.

அருக்கவம்ப கத்துதித்த கண்டி யதனி
லிரத்தவுருக் கண்டி யெழுந்த—துருத்திசழ்பொற்
கண்டியுந்தோன் றிற்றதனிற் காளவிட முண்டமணி
கண்டன் கருணையாற் காண். உக.

உருத்திரன்கண் ணீரி லுதித்தலினு கும்பே
ருருத்திராக் கம்மென் றுணர்க—தரிக்குமுறை
தன்னை யிவற்றை முறையுறவே சாற்றிடுவா
முன்னியம லன்று ளுளத்து. உஉ.

அருந்தவள மேயந் தணர்க்காகும் வேந்தர்க்
குரிமைகபி லஞ்சிவப்பென் றோர்க—வுரிமையதாம்
பொன்மை வயிசியர்க்குப் பூண்பதற்குச் சூத்திரர்க்கு
நன்மை கருமையென நாடு. உ௩.

அரிதாகில் வெண்மைதா னந்தணர்க்குச் செம்மை
யுரிமை யெனவே யுணர்க—வரிதாகிற்
செம்மையும் பொன்மைதகுந் தேடவரி தேலதுவு
நன்மை கருமையென நாடு. உ௪.

---

(உ௦) கலித்தது - பெருகியது, அருக்க அம்பகம் - சூரியநேத்திரம். கபிலை - கருமை கலந்தபொன்மையது.

தம்மிலிழிந் தார்மணியைத் தாங்கலுயர்ந் தோர்க்குரித்தே
தம்மிலுயர்ந் தார்மணியைத் தாந்தரிக்கின்—வெம்மைமிகு
மென்றெண்ணி யேதரியே லெண்ணமிழந் தேதரிக்கை
நன்றல்ல தீங்கென்றே நாடு. ௨௫.

ஏகமுக மாதிபதின் மூன்றுமுகந் தானிறுவா
யாகும் விதத்தையதி தெய்வத்தை—யாகுலங்கள்
தீர்த்துக் கொடுக்குஞ் சிறப்பினையுந் தேர்ந்துரைப்பாங்
கூர்த்தெழுந்த வாஞ்சையுளங் கொண்டு. ௨௬.

ஏகமுகத் துக்கிறைவ னேக பரமசிவன்
போகும் பிரமவதை பூண்டவர்க்கு—மாகத்தா
ரேத்துமணி கண்ட னிரண்டுமுகத் துக்கிறைவன்
றீர்த்திடுமா வின்கொலையின் றீங்கு. ௨௭.

மூன்றுமுகக் கண்டிக் கழன்மூன்றுந் தெய்வமா
மான்றபரி வோடே யணிவார்க்குக்—கீன்றவினை
தீருந் தெரிவைகொலை மற்றைச் சிறுகொலையுந்
தீரு மெனவே தெளி. ௨௮.

நான்குமுகக் கண்டிக் கதிதெய்வ நாலுமுகன்
றாங்கினர்க்குத் தீருநரர் தம்வதைதான்—பாங்குபெறு
மைந்துமுகக் கண்டிக்குக் காலாங்கி யோங்குபதி
சிந்துமிது தாங்கினர்க்கூண் டீங்கு. ௨௯.

ஆறுமுகக் கண்டியினுக் காறுமுக னேயதிபன்
மாறும் பிரமவதை மற்றனைத்து—மேறுபுக
ழேழுமுகக் கண்டியினுக் கீசனீ ஞேகேசன்
பாழிரணி யத்திருட்டின் பாங்கு. ௩௰.

---

(௨எ) மணிகண்டன் - சீகண்டருத்திரன், (௨அ) அழல்மூன்று-சுசி, பவமானன், பாவகன்; அழிவிலாது இயல்பினினுறையுமழல் சுசி, அரணியிலெழுமழல் பவமானன், முகில் மின்னிற்றோன்றுமழல் பாவகனெனக்கொள்க. (௨௯) காலாங்கி - காலாக்கினியுருத்திரன்.

எட்டுமுகக் கண்டியினுக் கீசன் விநாயகனே
கட்டினருக் கெட்டுமுகக் கண்டியினை—விட்டொழியுந்
தேசிகன்றன் பாரிதனைத் தீண்டிய தீவினைபொற்
காசினைக்கொள் கள்ளமும்போங் காண். ௫௧.

வாய்த்தமுக மொன்பதுக்குத் தெய்வம் வயிரவனே
தேய்த்திடுவன் கொன்றவினைத் தீங்கனைத்து—மேத்துமரி
பத்துமுகத் துக்குப் பதிபேய் பயந்துபோ
மித்தையணிக் தார்க்கரவு மின்று. ௫௨.

ஏகா தசமுகத்தை யேற்றிலங்குங் கண்டியினுக்
கேகா தசருத் திரரிறைவர்—வாகாரு
மிக்கண்டி பூண்டாருக் கேயும்யா கங்களெலாம்
விக்கினங்கள் வீடும் விரைந்து. ௫௩.

ஆறிரண்டு வாழ்முகத்துக் காதித் தியர்தேவர்
கூறுபெறக் காதுதனிற் கோத்தணிவார்க்—கூறுகள்போந்
துட்டமிரு கங்கள் சுழன்றுவிரைந் தோடுமுளத்
திட்டபல மும்வருமென் றெண். ௫௪.

ஏழோடிரு மூன்றுமுகக் கண்டியரி தாமதுமுன்
னூழின் னலத்தார்க் குறுமதனைத்—தாழ்வறவே
சென்னிமிசைத் தாங்கிடுக தெய்வம் பரமசிவ
னுன்னுநலம் புத்திமுத்தி யுண்டு. ௫௫.

---

(௫௫) பதின்மூன்றுமுகமணிக்குத்தெய்வம் சுப்பிரமணியக்கடவுள். அது பிதா, மாதா, சகோதரர், புத்திரர் கருவாதியவற்றின் கொலைப்பாவங்களைப் போக்கிச் சர்வாபீஷ்டத்தையும் சர்வசித்தியையும் கொடுக்கும். பதினன்குமுகமணிக்குத்தெய்வம் சிவமும்சத்தியும். அது தேவர்முனிவர்முதலாயினரையும் வசமாக்குவித்துச் சிவபதத்தைக்கொடுக்கும் என்பதும், பதின்மூன்று முகமணிக்குச் சிவனும் பதினன்குமுகமணிக்கு மறுக்களும் தெய்வங்களென்பதும் நூற்றுணிபே. இங்ஙனங்கூறுவது அம்மூர்த்திகளுக்கும் அவையுரித்தாதல் நோக்கியென்க.

சிகையிற் சிரத்திற் செவியிற் களத்திற்
றகைமையுறு மார்பு தனினும்—வகைபெறவே
வாகுமணிப் பந்தத்தும் வாய்க்க வணிந்திடுக
வாகமுற வெண்ணுமுறைப் போம். ௩௬.

தரிக்கசிகை தன்னிலுற வொன்றீசா னத்தாற்
றரிக்கசிரந் தன்னிலா றுறு—தரிக்கசெவிக்
கவ்வாறு தற்புருடத் தாற்கண்டத் தெண்ணான்கு
மவ்வா றகோரத்தி னால். ௩௭.

செம்பொன்னி னாலே செவிக்கொவ்வொன் றுஞ்செறிக்க
செம்பொனரி யார்வெள்ளி யாற்செறிக்க—செம்பினுயா
முத்தமமே செம்பொ னெளிர்வெள்ளி மத்திமமே
கைத்தசெம்பு தான்கனிட்டங் காண். ௩௮.

ஒன்றுமே மேழு முரத்தி னணிந்திடுக
வென்றும் வியோம வியாபினியே—யொன்றியுறு
மந்திர மெண்ணிரண்டு வாகுவினீ ராறுமணி
பந்தந் தனக்கென்று பார். ௩௯.

மந்திரமுன் கைக்கும் பிராசாத மேமதிக்கி
லைந்தொருமூன் றேடொருநா று மாலை—முந்தைவினை
மாயவரம் வாய்க்கமணி மார்பி னணிந்திடுக
காயுங் கருத்தார் கரு. ௪௦.

---

(௩௬) எண்ணளவு எல்லையளவென்று மிருவகையுள் இந்நூலிற் கூறப்படுவது எண்ணளவு; எல்லையளவை "கரத்தி னளவுகர மாலைசிர மாலை - சிரத்தி னளவென்றே தேறு, உர மாலை நாபியந்த மென்றுணர்க வன்றி - யுரமாலை யுஞ்செயலா கும்." என்னுஞ் சைவசமய நெறித் திருக்குறள்களானுணர்க. (௩௭) சிரத்திற்கும் ஈசானமந்திரமே யுரித்தாகலின் ஈசானத்தாலென்பது நடுநிலைத்தீபமெண்க. சிரசுக்கு நாற்பதுமாம். (௩௯) மார்பிற்கு ஐம்பத்து நான்கும் உதரத்துக்கு ஐம்பதும் கோடலும் உண்டு. (௪௦) முன்கைக்குமென்றவும்மையால் வாகு மணிக்கட்டுகளுக்கும் பிராசாதமந்திரமே உரித்தென்றதாயிற்று. மார்பில் ஐம்பதை மாலையாகவும் நூற்றெட்டை உபவீதமாகவும் தரித்தலுமாம்.

ஆசையினோ டொன்றுமுத லாயிரமந் தந்தரித்தா
ராசறவாய்ந் தங்கமறை யாகமமு—மாசறுக்குந்
தெய்வஞ் சிவனென்று தேறினர்க்குத் தேனுவினை
யவ்வளவீந் தார்பிறப்பற் றூர். ௪௧. ௪௨.

கண்டி யினைப்பூண்டார் காதலித் துள்ளிமுத
லுண்டிடுதல் செய்யா துவர்த்தொழிக்க—துண்டரெனப்
பட்டாருண் டேன்மதுவும் பாதாளக் கீழ்க்குழியுட்
பட்டாழ்ந் தழுவர் பதைத்து. ௪௩.

அயனுதற்கட் டோன்றியவற் காக்குமுறை நல்கு
நயனங்கண் மூன்றுடைய நம்பன்—வியனுடைய
கண்டிப் புடையுறைவ னென்றே கருதிடுக
வுண்டிப் பிறப்புமொழிப் போர். ௪௪.

ஒருமுகத்தி னோடே யொருமுகமே யேயு
மிருமுகத்தி னோடிரண்டே யேயுந்—திருமுகத்திற்
சேர்க்க திருமுகத்தைச் செப்பியவிவ் வாற்றினாற்
சேர்த்திடுக மற்றதனைத் தேர்ந்து. ௪௫.

அடியினடி யொன்றமுடி யந்தத்தி னொன்ற
விடையிற் பவளமுத் தேயத்—தொடைசெய்க
வன்றிப் பிரமக் கிரந்தியர வின்பந்த
மொன்றவிழை யான்முடிக வோர்ந்து. ௪௬.

உத்தமமே யாமலகத் தின்கனிக்கொப் பானகண்டி
மத்திமமா கும்மிலந்தை வண்கனிக்கொப்—பித்தலத்து
ணீசஞ் சணவித் திணையென்ன வேநினைக
பாசவிதம் பாற்றநினைப் பார். ௪௭.

---

(௪௧) தரித்தார் ஈந்தாரும் பிறப்பற்றரு மாவரென்க.

(௪௨) இச்செய்யுள் கிடைத்த பிரதியில் சிதைவுற்றிறந்தது. (௪௭) சணவித்து - கடலை,

முத்திக்கை யைந்தினான் முற்றுஞ் செபமாலை
புத்திக்கு நூற்றெட்டா கும்புகலி — னத்தமுமாம்
பாதமுமா முச்சிதனி னாயகந்தன் னைப்பதிக்க
வோதுகதொட் டேமுடியை யும். ௪௮.

இலங்கித்தா னாயகத்தைப் பாவந்தா னேயு
மிலங்கியா தேதொட் டெணுக — பலம்பெருகு
மேருவினை யின்றியே கோக்கலுமா கும்வியனார்
மேருவி னொவ்வாது வீறு. ௪௯.

இரண்டுமுகக் கண்டிசெப மாலைக் கிசையா
திரண்டுட னொன்று மிசையர் — திரண்டுடனே
பத்துமுக மும்பதின்மூன் றும்பழுது மற்றனைத்து
முத்தம மாமென் றுணர். ௫௦.

ஆறைந்து வெற்றியினை யாதரிப்பார்க் கையைந்தோ
டாறுமறி வாதரிப்பா ருக்கருக — மாறுடனே
பத்துமர ணத்திற் பதினைந்து மற்றையன
சூத்திரத்தின் மாலைமணி கொள். ௫௧.

---

(௪௮) அத்தம் - அரைப்பங்கு. பாதம் - காற்பங்கு, தூலமணிகளைக் கயிற்றினடியினும் சூக்குமமணிகளை அவ்வவற்றின் முடியினுமாகக் கோபுரவடிவிற்கோத்து, ஆதியந்தங்களை ஒருங்குகூட்டி, அவ்வவ்விலக்கங்களுக்குப் பிரத்தியேகமாக மேருமணியைக் கோத்து இருமுடிச்சிட்டுத், தூலமணியாதியாகச் செபிப்பது உற்பத்தி திதிசெபமென்றும், சூக்கும மணியாதியாகச் செபிப்பது சங்காரசெபமென்றும் கூறப்படுமாகலின், சங்காரசெபமுஞ் செய்தலாமென்பார், "ஓதுகதொட்டேமுடியையும்" என்றார்.

(௪௯) இலங்கித்தல் - கடத்தல்.

(௫௧) ஐந்துமணி செல்வத்திற்கும், ஆறுமணி சாந்திக்கும், இருபத்தாறுமணி தனவிர்த்திக்கும், இருபத்தெட்டுமணி புஷ்டிக்கும், முப்பதுமணி தனலாபத்திற்கும், முப்பத்திரண்டுமணி வெற்றிக்கும், ஐம்பதுமணி காமியகன்மப்பிரவர்த்திக்கும், நூற்றைந்துமணி போகமோக்ஷத்திற்கும் கொள்வதும் உண்டேனும் இவை தாம் கூறியவற்றுளடங்கலின் இந்நூலாசிரியர் வேறு விதந்திலர்.

குணிதமிரு நான்கங் குலியினிரே கைக்காங்
குணிதமொரு நூற்றெட்டுக் கூடுந்—துணிசங்கின்
புத்திரதீ பிக்குச் சதத்திரயம் புண்டரிக
வித்தினுக்கைஞ் ஞூறாய் விடும். ௫௨.

மூன்றயுத மாகும் பவளந் தனின்முறையா
லூன்றுபடி கத்தொருநூ றாயிரஞ்சங்—கீன்றிலங்கு
முத்தினுக்குக் கோடி குசைமுடிச்சீ ரைரங்கோடி
யித்தனையென் றெண்ணிலக்கண் டிக்கு. ௫௩.

வித்துப் பலாசின்வெண் சந்தனஞ்செஞ் சந்தனத்தின்
வித்துஞ் செபிக்கை விதியாமுன்—வைத்த
குசைக்கிரந்திக் கொக்குமெனக் கொள்க விவற்றைப்
பசைக்கேது வென்றெணிப்பார்ப் பார். ௫௪.

அரிதாகிற் கண்டி குசைக்கிரந்தி யாதி
யுரிமை யெனவே யுணர்க—விரலினாற்
செய்யிற் செபம்பிணிகள் சேருமத னாற்செய்யேல்
செய்கசெப மற்றவற்றாற் றேர்ந்து. ௫௫.

இந்திரதிக் காதியினை நோக்கியிருந் தேசெபிக்க
சிந்தனைசெய் வார்போகந் தீப்பிணக்க—மிந்திரனார்
மோகன மாகருட முச்சா டனமுத்தி
சாகுமர ணம்முறையாற் றாம். ௫௬.

படிகவொளி போலப் பரமனைப்பா விக்க
விடுவார்கள் பாச விதத்தைத்—தொடுவொரும்
புத்திவிதத் தைச்செருக்கும் போதுபுரி தீவினையைக்
கைத்துவிடு வார்தாமுங் காய்ந்து. ௫௭.

---

(௫௨) குணிதம்-அளவு. (௫௩) முத்தினுஞ்சிறந்தது பத்திராக்கமணியென்பது இலிங்க புராணம். (௫௪) பசை - இலாபம். (௫௬) போகமாதிய எட்டையும் முறையாற் சிந்தனை செய்வார் இந்திரதிக்காதியினை நோக்கியிருந்து செபிக்கவென இயையும்.

மாரணத்தைச் செய்வாதன் மைநிறம்போ லேநினைக
காரணனைப் பொன்போற் கருதிடுக—பேராதே
நிற்கும் படிநினைவார் கிஞ்சுகம்போ லேநினைக
வற்கமுற வாக்கு மறிந்து. ௫௮.

செவ்வரத்தம் போதெனவே சிந்திக்க வெற்றியினை
யெவ்விடத் துங்கொண் டிடவெணுவார்—கௌவையுட
னுச்சா டனம்புரிவார் தூமநிறம் போதெனவே
யிச்சித்துத் தெய்வத்தை யீங்கு. ௫௯.

தரிக்கவடந் தர்ச்சனியி லாகருட ணத்திற்
றரிக்கவசிக் குற்றநடுத் தன்னிற்—றரிக்கவடம்
புத்திக்கு முத்திக்கும் பூணு ரனுமிகையி
லித்தகையங் குட்டந்தொட் டெண். ௬0.

மாரணத்தி னுச்சா டனத்தின்மற் றைப்பிணக்கின்
காரணமா குங்கனிட்டத் தங்குட்ட—மாருறவே
நித்தியகன் மத்தி லனுமிகையி னங்குட்டம்
வைத்துச் செபிக்கை வரம். ௬௧.

மாலையினை யின்றிச் செபிக்கை வரமலவெக்
காலையினு மென்றே கருதிடுக—மாலைக்
கிழையிருபத் தேழுவெண் பட்டிற் பருத்தி
யிழையும் வழுவலவென் றெண். ௬௨.

முத்திக்குப் பிங்கலையி னேடினுயிர் தான்மொழிக
புத்திக் கிடையிற் புகன்றிடுக—வொத்தியங்கி

---

(௫௮ - ௫௯) யாம் சூசனத்திற்குறிப்பதுபோலன்றி இவ்வாசிரியர் தனித்தனி விதப்பது போல விதந்தநூல்கள் கிட்டாமையின் இவ்விருசெய்யுட்களும் வழுக்களையாது கிடைத்த பிரதியிலிருந்தவாறே அச்சிடப்பட்டன. (௬௨) குக்குமமான இழையிருபத்தேழு உத்தமம், இருபத்தொன்று மத்திமம், பதினைந்து அதமமென்பது நூற்றுணிபாகலின் மணிகளினது துவாரம் கொள்ளாவழி மத்திம அதமங்களைக் கொள்ளல்வேண்டும்.

லிவ்விரண்டி னும்புத்தி முத்திபெறு வாரிசைக்க
வெவ்வழிநன் மைக்குமிது வேது. ௬௩.

அந்தணர்முன் மூவருமோங் காரத்தோ டார்வத்தா
லைந்தெழுத்து முச்சரிக்க வன்புளூற—வைந்தெழுத்தும்
பாங்கே யெமக்கென்று சூத்திரர் தாம்பகர்க
வோங்காரந் தன்னை யொழித்து. ௬௪.

மந்திர மானத மந்தமொலி யென்றுமூன்
றிந்தவிதத் துண்மா னதமெனத்தான்—மந்திரத்தை
யுச்சரிக்கை மந்தம் பிறருணரா தேகாவா
லுச்சரிக்கை யென்றே யுணர். ௬௫.

அந்நியருங் கேட்க வறையுமது தாமொலியே
யின்னவொலி தானந் தணரியற்று—நன்னிலைமை
யானயா கத்தி னருக மெனவறிக
வூனவினை யோட்டவுனு வார். ௬௬.

மானதந்தான் முத்திக்காம் புத்திமுத்திக் காமந்த
மேனையொலி குத்திரங்க ளெட்டினுக்கா—மானதத்தை
யோதுகமே லேற்றிவட மற்றையொலி மந்தமிவை
யோதுகதீ ழோடவட மோர்ந்து. ௬௭.

அகர்ப்பஞ் சகர்ப்பமென வாகுமிரு பேத
மகர்ப்பந் தியானமற வாக்கல்—சகர்ப்பந்தா
னுன்னிக் கடவுளடி யுச்சரிக்கை மந்திரத்தை
யின்னசெப மேவரமென் றெண். ௬௮.

---

(௬௫) மந்தத்தை உபாஞ்செனவும் ஒலியை வாசகமெனவும் வழங்குவர்.

(௬௭) அஷ்டகன்மம் - மோகனம், உச்சாடனம், ஸ்தம்பனம், மாரணம், ஆகருஷணம், வசியம், உன்மாதனம், வித்துவேஷணம் என்பனவாம். குத்திரம் - க்ஷுத்திரமென்னும வடமொழித்திரிபு, அவை வஞ்சிக்குமிழிதொழில்கள்.

அங்குட்டந் தர்ச்சனியு மாகு மொலியினுக்கே
யங்குட்ட மத்திமையு மந்தத்தா—மங்குட்டந்
தன்னோ டநாமிகையுந் தான்மா னதத்தாகு
மின்னுமொரு மாலையிசைப் பேம். ௬௯.

ஆடகத்தாற் பண்ணுவிக்க வங்குட்ட மாலையினை
யீடுபெற வெள்ளியினு மாமியற்றன்—மாடில்லார்
செம்பினுஞ்செய் தேகா தசக்கண்டி யைச்செபிக்க
நம்பி னனுமிகையி னால். ௭௦.

மடிதுயில் வாத மதங்கத மாதி
விடுகை செபஞ்செய்யும் வேலை—கடிதொடேல்
சோம்பு முரியே றுரிசனைப்பா ரேல்சொல்லேல்
வேம்பனைய சொல்லின் விதம். ௭௧.

தரியேல் சிரங்களந் தன்னிற் படத்தைத்
தரியேன்மெய்க் கஞ்சுகந் தன்னை—யிருளிலிரே
லாதரவி னுட்டகமே யாடுகர நாயெருமை
யேதமுள பன்றியும்பா ரேல். ௭௨.

மந்திரத்தை யல்லாத மற்றொருசொல் லைச்சொலினு
மந்திரமாங் கண்டி வடங்கரத்திற்—பந்தித்தே
யில்லறத்தை யோம்புவோன் றுனியற்றி னல்விரத்தன்
சொல்லுகமுன் சொன்னபடி சூழ்ந்து. ௭௩.

---

(௬௯) அங்குட்டமுமத்திமையும் ஒலிக்கும், அங்குட்டமுந்தற்சனியும் மந்தத்திற்கும், கொள்ளுதலும் சிலநூற்றுணிபு. (௭௦) நம்பு - விருப்பம்.

(௭௧) புலையராதியரைக் காண்டலாதிய தோஷமணுகின் மும்முறை ஆசமனஞ்செய்து, நியாசம்புரிந்து சூரியனையும் அக்கினியையும் நோக்குவதுமன்றிப் பிராணயாமத்தோடு சிவத்தியானமும் செய்தலவேண்டுமென்பது வாயுசங்கிதை.

(௭௩) இயற்றினல் மந்திரமாமென இயையும். இயற்றல் - மணிகளைத்தள்ளுதல்.

கண்டிவடஞ் சந்திதொறுங் கைதனிற்கொண் டேகணிக்க
வெண்டிகழ்வி னுத்தமமோ ராயிரமே—விண்டதனிற்
பாதிபா தஞ்செபிக்கை மத்திமப்பாங் காங்கனிட்ட
மோதினொரு நூற்றெட்டென் றோர். ௭௪.

வத்திரத்தி னாலே மறைக்க வலக்கரத்தின்
வைத்தசெப மாலைதனை வாய்க்கவர—மெய்த்தலையிற்
பாதமலர் வைத்தாண்ட பண்டிதன்றான் பார்த்திடினுஞ்
சேதப் படுஞ்செய் செபம். ௭௫.

திண்ணிலத்திற் கைதவறி வீழிற் செபமாலை
கண்ணிற் படுத்துதக கந்தத்தாற்—பண்ணுறவே
யாட்டியருச் சித்துக்கா யத்திரி நூற் றெட்டெணுக
வோட்டிடுவார் வீழ்த்துற்ற வூறு. ௭௬.

அறினே கயிறுசெப மாலை யதனைக்
குறைவறமுன் போற்கோவை யாக்கி—முறையுடனீ
ராட்டியருச் சித்தே யகோர மொருநூற்றை
நாட்டியவன் றாளு ணயந்து. ௭௭.

கண்டியினைத் தீண்டிற் கரிசரு நோயாரும்
விண்டிடவே புன்மைவியன் கௌவியத்தைக்—கொண்டுவிதி
யாட்டியணி யாய்பூத்தா ளந்தியருந் தீண்டியிடின்
வீட்டிடுக வுண்ணொந்து வேறு. ௭௮.

வரைச்சிகரந் தன்னில் வனத்தி னதியின்
கரைக்கணம லன்கோயிற் கண்ணு—முரைத்திடுக

---

(௭௭) உள் - உள்ளுகவென்னும் முற்று. அகோரமூர்த்திதாளை உண்ணயந்து அகோரத்தைச்செபிக்க எனலுமாம். இப்பொருட்கண் நாட்டியென்பதனை முன்னிலை வினைமுற்றாகவேனும் வியங்கோண்முற்றாகவேனுங் கொள்க. வியங்கோள் இகரவீறுபெறுதல் "பாங்கரணவகலங்காட்டி" என்பதனுரையானுமுணர்க. (சீவகசிந்தாமணி கோவிந்தையாரிலம்பகம் - ௫௮.)

சைவரெலை தன்னிலழற் சாலைகோ சாலைதன்னிற்
றுய்யதன தாச்சிரமத் தும். ௭௯.

ஒன்றொன்றே யாகு முருச்செபிக்கிற் றன்மனையி
லொன்றுநூ றாமாக்க வொன்றுமெலைக்—கொன்றுதா
னாயிரமா மாற்றின் கரையி னயுதந்தா
னேயுங் கடற்கரைக்கென் றெண். ௮௰.

குன்றத்தி னுச்சி குலவு தபோவனத்தி
னொன்று நியுத மெனவுணர்க—வொன்றுமொரு
கோடிசிவ னாலயத்திற் சந்நிதிகு ணிப்பரிய
கோடியுறு மென்றுளத்திற் கொள். ௮௧.

கருமா னுரிஞான விர்த்தியினைக் காட்டும்
வரிவேங்கைத் தோன்முத்தி வாய்க்கு—முரமுடைய
கம்பளந் துன்பங் களையு மிழைக்கலிங்கம்
வெம்புமட னோயினைவீட் டும். ௮௨.

மரப்பலகை யாக்கும் வறுமையினை வன்கல்
வருத்தும் பிணியால் வடிவை—யுரத்தநிலந்
துன்பந் தருமிவற்றை யெல்லாந் துறந்துறைக
வன்புடன்முன் சொன்னா தனத்து. ௮௩.

முடக்கி முழந்தா ளிரண்டு முறையா
லடக்கியடி தன்னோ டடியை—யிடத்தொடையு
ளொன்ற வலப்புறத்தாள் வைத்தோங் கிடவுட்கண்
ணொன்றியுற நாசிநுனி யோடு. ௮௪.

---

(௮௩) இவற்றையெல்லாமென்னும் சொல்லாற்றலால் மற்றை வேணுவாசனமுதலியவுங் கொள்க. வேணுவாசனம் தரித்திரம், திரணாசனம் கீர்த்திநாசம், பல்லவாசனம் சித்தமயக்கம், வஸ்திராசனங்களுள் கரியவஸ்திராசனம் அபிசாரக்கிரியை, சிவந்தவஸ்திராசனம் வசியாதிக்கிரியை, வெள்ளைவஸ்திராசனம் சாந்தியாதிவிதி, மற்றைவஸ்திராசனம் வியாதிநிவிர்த்தி, சித்திரகம்பளாசனம் தர்மார்த்தசித்திகள் அளிக்குமென்பதும் நூற்றுணிபே.

இருக்குமிது தன்னைவீ ராதன மென்றே
யுரைக்குமிய லிவ்வா தனத்துற்—றருச்சிக்க
வாதியடி தன்னைச் செபிக்கபது மாசனமு
நீதியென வேஙிளையாய் நீ. அரு.

ஆவாக னாதிசயம் புச்சிவலிங் கத்தினிலை
யோவாதே நின்மலனாங் குற்றிடலா—லோவாதே
கண்டியினு நிற்பன் கடவுளத னானிதற்குங்
கண்டதிலை யாவா கனம். அசு.

ஆயினுஞ்சொல் வாமீங் கருச்சிக்கும் பாங்கினையும்
வாயின் மனத்தின் மதிப்பரிய—தேயன்
சிவனமலன் செப்பிய வாகமத்திற் றேர்ந்தே
பவமுயிர்க்குத் தீரும் படிக்கு. அஎ.

சுத்தியோ சாதத்தாற் கௌவியத்தைத் தானாட்டி
யுத்தரத்தி னாற்பிசைந்தொண் மாலையினைச்—சுத்தநீ
ராட்டியகோ ரத்தா லழற்றூபங் காட்டியே
யோட்டுகவீ ரம்புருடத் தோடு. அஅ.

தனித்தனியே யீசானத் தாலே சதக
மெணிக்குறையா தேசெபிக்க வெங்கும்—கணித்திடுக
நாயகத்தைத் தொட்டே நலமார் பிரமங்க
ளேயச் சதங்குறையா தே. அகூ.

---

(அரு) வலத்தொடையுள் இடப்புறங்காலை வைப்பதும் வீராதனமேயாம். இதனை "அன்றியே வீரா தனமும்பாங் காமிடக்கா, றென்றொடைமே லொன்றச் செறி." என்னும் சைவசமயநெறித் திருக்குறளானுமுணர்க. பதுமாசனமாவது - உள்ளங்கால்கள் மேற்றோன்ற இரண்டு புறங்கால்களையும் இருதொடைமீது மாறிவைப்பது. குதிகளைப் பீசத்திற்குக் கீழாக்கி இருகைகளால் இருகாற்பெருவிரல்களைப் பிடித்திருப்பதும், இருகைகளையும் சம்புடமாகச்செய்து மடியில்வைப்பதும் பதுமாசனமெனப்படினும் செபகாலத்திற் கொள்வது முந்தியதையே யென்க. (அஅ) உத்தரதிசையை நோக்கும் வாமதேவத்தை உத்தரமென்றார். பிசைதல் - ஈண்டு அலம்பிச் சுத்திசெய்தல்,

திகழச் சிவலிங்கந் தன்னிற் சிவனைப்
புகழப் புரிபூ சனைபோ—னிகழ்வே
நாயகந் தன்னி லருச்சிக்க நாண்மலரா
லேயவுப யோகமினி தே. கூ0.

சிவபத்தர் கைக்கண்டி தானத்தைச் செய்தோர்
பவமற்று மேலே படர்வர்—சிவனுற்ற
நற்புரியும் புக்கிருந்து நம்பனரு ளாற்பாசம்
பக்கிடத்துய்ப் பார்பேரின் பம். கூக.

தெரிசிக்கும் புண்ணியத்திற் றேரினொரு கோடி
பரிசிக்கி னாகுமெனப் பார்க்க—பரிசுத்த
ராகியே தாங்கி னவற்றினதி கஞ்செபிக்கி
னாகும் பலமளப்பா ரார். கூ௨.

கண்டியணிந் தார்தம்மைக் கண்டவுட னேபணியார்
பண்டை நரகிற் படிந்தழிவர்—கண்டியினைப்
பூண்பாரைக் கைதொழுது பூசிப்பார் மேற்புரியிற்
காண்பார் கடவுளடி கள். கூ௩.

திருநீறு நெற்றி தரியானே யாகிற்
பரிவுறமெய்க் கண்டிபரி யானே—லருமறையின்
வாக்கியத்தி னாலே மகம்புரியு மந்தணன்று
ணாய்க்கடவோன் கொள்ளா னலம். கூச.

துயிலும்போ துஞ்சலம லஞ்சொரியும் போதும்
பயிலும்போ தும்பாரி பாய—லயர்வாக்கு
நோயிற் பிறப்பிறப்பா சூசத்தி னுந்தரியேற்
காயத்திற் கண்டியெனுங் காப்பு. கூரு.

---

(கூக) மேல் - சுவர்க்காதிபதங்கள்.

(கூ௨) தர்சிக்கின் ஆயிரகோடிமடங்கு பலமெனக்கொள்க.

(கூச) நாய்க்கடவோன் - சண்டாளன் பிராமணியுடனே கூடியவழிப் பிறந்தவன்.

காய மொருவும்போ தோர்கண் டியைவிழுங்கி
மாயுநர்தா மாய மனத்தின்றி—யெய்வ
ருருத்திரலோ கத்தி னுதிப்பினுமீங் கேயா
சரித்தமலன் ருளையடை வார். ௯௬

கட்டி யிடினே கழுத்தினுறக் கண்டியினை
விட்டுடலை வீயும் பொழுதுயிர்தான்—கிட்டி
யுருத்திர லோகத் துறையுமணி தானே
பரித்திடினுர் சொல்வார் பலம். ௯௭

நின்றுநெடு நீரி னெருப்பிற் பொழிமழையில்
வென்று புலன்களைப்பே ரூர்வெறுத்து—மொன்றினர்கள்
புத்திமுத்தி கண்டியெளி திற்பூண் டவைபொருந்தாக்
கொத்தையருக் கேதுணை கூறு. ௯௮

பூணுமற் கண்டியினைப் பூசைபுரி வார்பலத்தைக்
காணு ரெனவே கழறுமறை—நாணுதே
பூண்டுசிவ பூசைபுரி வார்புகுந்து மேற்புரத்துக்
காண்டிருப்பா ரீசன் கழல். ௯௯

புண்டரிகத் தோன்மாயன் புத்தேளிர் கோன்முனிவ
ரண்ட மரிக்குமர னைங்கரனுங்—கண்டியினைப்
பூண்டு தமக்குப் பொருந்ததிகா ரம்புரிந்து
காண்டிருப் பார்நிட் களம். ௧௦௦.

நாய்க்குத் தவிசிட்ட தென்னநரர்க் குக்கண்டி
வாய்க்கவிது தன்னை மதி யாமனிதர்—நோய்த்துயரூன்
பாரதகண் டத்துப் பரித்துமரித் துப்படிவர்
கூரிடரா ருங்கீழ்க் குழி. ௧௦௧.

தரித்தே யுரத்திற் சதாட்டக மாலை
பரித்தே யமலன் பதத்தைக்—கருத்தி

(௧௦௧) ஊன் என்றது ஊனுலாகிய்வுடலை,

ணடப்பவர் தாமடி தோறு நணுவர்
படிப்பரிமா யாக பலம். ௧0௨.

சூட்டி யலனைத் தொழுதணிவார் கண்டிவடம்
வீட்டிவினைத் தீமை விதமனைத்துங் —கூட்டினையு
மிட்டுவிம லன்புரிபுக் கின்புற் றநாதிமலக்
கட்டறக்காண் பார்நிட் களம். ௧0௩.

கண்டியரி தாகின்மண் ணாலே பணிக்கண்டி
கொண்டணிவார் மூவேழ் குலத்தோடும்—பண்டைவினை
வீட்டிவிண் ணாள்வ ரெனின்வியன் கண்டிக்குக்
காட்டிடுவா ரார்பலத்தைக் கண்டு. ௪0௪.

வத்திரத்திற் சூழ்ந்திந்த மாலையினைப் பெட்டகத்து
வைத்தெடுத்துச் சந்திதொறும் வாய்க்கவே—சுத்தவுடற்
பூட்டிடுக பூட்டில் வினையனைத்தும் போக்கியே
காட்டிடுவா ரீசர் கழல். ௧0௫.

பொன்னுலகம் வெந்நரகம் புண்ணியபா வம்புரிவார்
நின்மலனு முண்டென்று நிச்சயித்தா—ரிந்நிலைமை
யாத்திகரே யார்கண்டா ரம்மைப் பலமென்பார்
நாத்திகரென் றேயுளத்து ணாடு. ௧0௬.

நாத்திகர் கேட்க நவிலற்க விந்நூலை
யாத்திகர்க்கார் வத்தா லறிவிக்க—வாத்திகருக்
கன்பா லுணர்த்தினரு மாராய்ந்த வாத்திகரு
மின்பார்ந் திருந்துநிலத் தின். ௧0௭.

சேர்ந்துசிவ லோகத்தை யங்குளபோ கந்திளைத்துத்
தீர்ந்தொடுங்கு நாளிற் செகமெல்லா—மார்ந்தவிரு
ணீங்காதே நீங்கி நிமலனரு ளாற்றிளைப்பர்
பாங்காற்றஞ் சத்தியினின் பம்.

சிறப்புப்பாயிரம்.

சாற்றினனே கண்டிவரந் தன்னையெணிச் சம்பந்த
ஞற்றினையுஞ் செஞ்சடைமேலார்வித்தான்-கூற்றினைக்கொன்
றந்தணனைக் காத்தா னமர்ந்திலங்கு தில்லைவனத்
தந்தமிலான் றண்ணருளா லாய்ந்து.

உருத்திராக்கவிசிட்டம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# உருத்திராக்கவிசிட்டசூசனம்.

இவ்வுருத்திராக்க விசிட்டநூலிற் கூறப்படாதனவாய் வேறு சிவாகமாதிகளில் கூறப்பட்டுள்ளனவற்றில் ஈண்டைக் கின்றியமையாதனசில சுருக்கிவிளக்குதும்:—இவற்றை மேற்படி நூலில் இயைபுநோக்கி ஆங்காங்குக் கூட்டிக்கொள்க.

சந்திரநேத்திரத்துதித்தநீரில் பதினறுவித வெண்ணிறவுருத்திராக்க மரங்களும், சூரியநேத்திரத்துதித்த நீரில் பன்னிருவிதச் செந்நிறவுருத்திராக்க மரங்களும், அக்கினி நேத்திரத்துதித்தநீரில் பத்துவிதக் கருநிறவுருத்திராக்க மரங்களுமாக முப்பத்தெட்டுமரங்கள் தோன்றின. அவற்றுதித்த அம்மணிகளில் உன்னதமுடையபக்கமே முகமும் உன்னதமில்லாதபக்கமே அடியுமாம். முககணிதங்களை இரேகைகளைக் கொண்டே அறியவேண்டும். அவற்றின்மூலம் பிரமதேவரும் நாளம் விஷ்ணுமூர்த்தியும் முகம் உருத்திரமூர்த்தியும் கேசரங்கள் சகலதேவதைகளுமாம். அவை பதினறுமுகம்வரையும்

உண்டு. அவற்றுள், ஒருமுகமணிதரிக்கில் சிவபெருமானுக்கும், இருமுகமணி தரிக்கில் சிவசத்திக்கும், மூன்றுமுகமணி தரிக்கில் மும்மூர்த்திகளுக்கும், நான்குமுகமணிதரிக்கில் பிரமதேவருக்கும், ஐந்துமுகமணி தரிக்கில் சதாசிவமூர்த்திக்கும், ஆறுமுகமணிதரிக்கில் சுப்பிரமணியக்கடவுளுக்கும், ஏழுமுகமணிதரிக்கில் சத்தமாதர்களுக்கும், எட்டுமுகமணி தரிக்கில் அஷ்டவித்தியேசுரர்களுக்கும், ஒன்பதுமுகமணி தரிக்கில் கங்கைமுதலிய நவதீர்த்தங்களுக்கும், பத்துமுகமணிதரிக்கில் பத்துத்திக்குப்பாலகர்களுக்கும், பதினொருமுகமணிதரிக்கில் பதினொருருத்திரர்களுக்கும், பன்னிருமுகமணி தரிக்கில் விஷ்ணுமூர்த்தியாகிய வாசுதேவர் முதலிய பன்னிருவர்களுக்கும், பதின்மூன்றுமுகமணி தரிக்கில் சதருத்திரர்களுக்கும், பதினான்குமுகமணி தரிக்கில் அசுவினிதேவதைகளுக்கும் அஷ்டவசுக்களுக்கும், பதினைந்துமுகமணிதரிக்கில் சந்திரன் வருணன் முதலியவர்களுக்கும், பதினாறுமுகமணிதரிக்கில் முப்பத்து முக்கோடி தேவர்கள், பிரமதேவர், விஷ்ணுமூர்த்தி, சிவபெருமானென்னும் அனைவர்க்கும் பிரீதியாகும்.

இம்மணி தரிக்கப்பெறுவோர் எத்தகையரே யாயினும் அவர் சீவன்முத்தரேயாவர். ஒரு சுணங்கன் தரிக்கப்பெறினும் நற்கதிபெறுவது திண்ணம். பற்பல தெய்வநதிகளின் மூழ்குதல், பரிமேதமுதலிய யாகமியற்றுதல், ஏழுகோடி மகாமந்திரங்களையுமெண்ணுதல், ஐந்தழலினிடைவதிந்து அருந்தவம் புரிகுதலாதிய பலன்களையும் எளிதின் நல்கும். முப்புரிநூலின்றி வேதமோதின் அது பயன்படாவாறுபோல, விபூதியோடு உருத்திராக்கவடமுமின்றிச் செய்யும் நீராடல் ஓதல் ஈதல் தென்புலத்தோர்க் குதவல் சிவனைப்பூசித்தல் முதலியவை சிறிதும் பயன்படாவாம். சிகையிற்றரித்து எந்நீரில்மூழ்கினும் சிவகங்கையில் மூழ்கியபலன் சித்திக்கும். ஒருவர் ஆயிரமணி

தரிக்கப்பெறின் சிவனெனவே தேவரும்வழிபடத்தக்கவராவர். பஞ்சாக்கரவுச்சாரணத்தோடு இம்மணிகளை அணியப்பெற்றவர்பால் சிவபெருமான் என்றும் சாந்நித்தியராயிருப்பர். அவ்ருறையுந்தலம் முத்தித்தலமாகும். அவரைத்தரிசித்தவருந்தேவராவர். இன்னும் இவ்வுருத்திராக்கவிசிட்டநூலில்விதந்தருளிய பலன்களையளிப்பதுமல்லாமல், ஐந்துமுகமணி புணர்தற்குரியரல்லாத பிறமகளிரைப்புணர்ந்த பாவத்தையும் போக்கும். ஏழுமுகமணி கோவதையையும் போக்கும். எட்டுமுகமணி பொற்களவு, துலாதானமுதலிய தானமேற்றல், பிறரன்னங் கவர்ந்துண்ணலாதியவற்றின் பாவத்தையும் போக்கும். ஒன்பதுமுகமணி ஆயிரம் உயிர்வதையையும் நூறுபிரமவதையையும் பூதம் பிசாசம் சர்ப்பமுதலியவற்ருலாகும் விக்கினங்களையும் போக்கிச் சித்திமுத்திகளைக் கொடுக்கும். பதினொருமுகமணி ஆயிரம் அசுவமேதபலத்தையும் நூறு வாசபேயபலத்தையும் இலக்ஷம் கோமேதபலத்தையும் நல்கும். பன்னிருமுகமணி கோமேதபலத்தையும் அசுவமேதபலத்தையும் சுவர்ணதானபலத்தையும் அளிக்கும்.

இத்தகையமணிகளுள்ளே சிகைக்கு ஏகமுகமணியும், சிரசுக்கு இரண்டுமுகம் அல்லது பதினொருமுகமணிகளும், காதுகளுக்கு ஐந்து ஏழு பத்துமுகமணிகளும், கண்டத்துக்கு எட்டுமுகமணிகளும், உதரத்துக்கு நான்குமுகமணிகளும், வாகுகளுக்குப் பதின்மூன்றுமுகமணிகளும், மணிக்கட்டுகளுக்கு ஒன்பதுமுகமணிகளும், உபவீதத்திற்குப் பதினான்குமுகமணிகளும், மார்பிற்கு எம்முகமணிகளும் உரித்தாகும். ஆறுமுகமணி வலப்புயத்தினும், ஒன்பதுமுகமணி இடப்புயத்தினும், பதினொருமுகமணி சிகையினும், பன்னிருமுகமணிகாதுகளினும், பதினான்குமுகமணி சிரசினும் தரிப்பதும் உத்தமமே. ஒன்று ஐந்து பதினொன்று பதினான்குமுகமணிகள் தினமும் பூசித்

தற்கு மிகச்சிறந்தனவாகும். சயனத்தினும் மலசலமோசனத்தினும் புணர்ச்சியினும் நோயினும் சனனசெளசம் மரணசெளசங்களினும் உருத்திராக்கதாரணங்கூடாது. இக்காலத்திலும் அணிந்திருத்தல்வேண்டுமென ஆங்காங்குக்கூறுவது பீடையினிவிர்த்திப் பொருட்டாகலின் சிகையினும் சாதுகளினும் உபவீதத்தினும் எப்பொழுதுந் தரித்துக்கொள்ளலாம்.இவ்வாறன்றி நீக்கமில்லாதிருக்கும்படி கண்டத்தில் முப்பத்திரண்டு மணியேனும் அல்லது ஒருமணியேனும் தரித்திருக்கவேண்டுமென்பதும் விதியேயாம்.

இனிச்செபத்திற்கு விரல்களுள்ளே அங்குஷ்டத்தினல் மோக்ஷமும், தர்ச்சனியால் சத்துருநாசமும், மத்திமையால் அர்த்தசித்தியும், அனாமிகையால் சாந்தியும், கனிஷ்டையால் இரக்ஷணையுமாம். மணிகளுள்ளே சங்கமணிகளால் ஐசுவரியமும், படிகமணிகளால் மோக்ஷமும், பதுமமணிகளால் புஷ்டியும் இலக்ஷ்மீகரமும், புத்திரதீபமணிகளால் புத்திரர் பசு தானியாதி அபிவிர்த்தியும், பவளமணிகளால் வசியமாதிகளும், முத்துமணிகளால் சர்வசித்தியாதிகளும்,மாணிக்கமணிகளால் உலகவசியமாதிகளும், மரகதமணிகளால் சத்துருசயமுதலியவைகளும், குசக்கிரந்திமணிகளால் பாவநாசமும் வித்தியாபிவிர்த்தியும், பொன்வெள்ளிமணிகளால் காமிககன்மாதிகளும், மாதிருகாக்ஷரமணிகளால்வாக்குசித்தியும்,இரசமணிகளால்சர்வகாரியசித்தியும், உருத்திராக்கமணிகளால் போகமோக்ஷங்களும் உண்டாமாகலின், இவ்வுருத்திராக்கமணிகொண்டு ஒருருச்செபிக்கினும் ஒன்றுகோடியாமென நூல்களிற் கூறப்படுதலால்உருத்திராக்கமே செபத்திற்கு எவற்றினும் சிறந்தசாதனமென்று தெளிக.

இச்செபமாலை கொண்டு செபிக்குங்கால் நூற்றெட்டு அல்லது எண்பத்துநான்கு முதலியவாகக் கூறப்படும் யோகா

சனங்களுள், பத்திராசனம் முத்தாசனம் மயூராசனம் சித்தாசனம் (அல்லது சிங்காசனம்) பத்மாசனம் சுவத்திகாசனம் வீராசனம் கோமுகாசனம் சுகாசனமென்னும் நவாசனங்களும் செபத்திற்கு யோக்கியமெனப்படுதலின், இவற்றுள் இயன்றதொன்றில்வதிந்து, ஆபிசாரம் கிரகம் உச்சாடனமுதலியவற்றின் சித்திக்குக் கருநிறமாகவும், வசியமாதியவற்றின் சித்திக்குச் செந்நிறமாகவும், முத்தியாதியவற்றின் சித்திக்கு வெண்ணிறமாகவும், உபாசனாமூர்த்திகளைத் தியானித்துச் செபிக்கவேண்டும். அகோராதி உக்கிரமூர்த்தி தியானத்தினால் உடனே பாவம் ரோகமுதலியவற்றின் நாசமும், சதாசிவாதி மிசிரமூர்த்தி தியானத்தினால் சிலகாலத்தின் பின்னர்ச் சகலசித்திகளும், சாம்பசிவாதி சாந்தமூர்த்தி தியானத்தினால் விரைவும் தாமதமுமின்றிச் சாந்தி ஞானம் முதலியவைகளும் உண்டாகுமெனக்கொள்க. இந்நூலிற் கூறியபடியன்றி வசியம், வியாதி, ஆபிசாரம், துவேஷம், தனலாபம், ஆகருஷணம், சாந்தி, மோக்ஷம் எனப்படும் இவ்வெண்வித பலன்களைநாடி முறையே கிழக்காதி யெண்டிக்குகளையும் நோக்கியிருந்து செபித்தலும் உண்டு. ஓசையுண்டாயிற் பாவமிகுமாகலின் செபமாலையில் ஓசையுறாமற் செபிக்கவேண்டும். இன்னும் விரிக்கிற் பெருகும். ஏனையவற்றையும், இதுபற்றிய சரித்திரங்களையும் உபதேசகாண்டம் பிரமோத்தர காண்டம் சிவரகசியம் கடம்பவனபுராணமாதியவற்றிற்காண்க.

உருத்திராக்கவிசிட்டசூசனம் முற்றிற்று.

---

சிவசண்முகன்றுணை.

# திருக்கோயிற்குற்றம்.

திருக்கோயி றன்னின்மலஞ் சலம்விடுத லுமிழ்தல்
திருவிளக்குச் சாயையிலிங் கச்சாயை கடத்தல்
ஒருக்காலாய் வலம்வருத லோடிவலம் வருதல்
ஒண்டொடிவே சியர்ப்புணர்த லுற்றவரை நினைத்தல்
மருக்கமழ்நின் மாலியத்தைச் சிவன்றனக்கோ முகையை
வழிகடத்த லாடையின்றி மருவுதல்கான் றுமிழ்தல்
பெருக்கநீ றணியாமை பெலிப்பற்று மிதித்தல்
பெலிபீடங் குறுக்கிடுதல் பெருமான்சந் நிதியில். க.

ஏறுடனே தூபிதுச தண்டுபெலி பீடம்
இலிங்கமிவை சாயைமிதித் தேகுதல்பொய்ம்மொழிதல்
பேறிழவே யசுசிபிறர் தாரத்தை விரும்பல்
பெரும்புனலா லிருபாதங் கழுவாமை சயனம்
தேறுபா கிலைதினறம் பலமுமிழ்த றிருடல்
திருக்கோயி னியமத்தைச் செய்தவத்தோர் தங்கட்
சாறணியுஞ் சடைமுடியா ராகமத்திற் சொலுமிவ்
வாறைந்தோ டிரண்டுகுற்ற மாகா வன்றே. உ.

திருக்கோயிற்குற்றம் முற்றிற்று.

---

இவ்வாசிரிய ரருளிச்செய்தவையென மூன்று பிரதிகளிற் கிடைத்த இச்செய்யுட்கள் கடம்பவன புராணக்கருத்தையே ஒத்திருக்கின்றன; ஆனால், பிரதிகளில் இரண்டொரு பாடபேதமாத்திரம் உண்டு.

---

(உ) பேறிழவு—பேறும் இழவுமென இரண்டாகக்கொள்க.

# திருக்கோயிற்குற்றச்சூசனம்.

இம்முப்பத்திரண்டு குற்றங்களுள்ளே சிலவற்றைச்சொல்லாது வேறு சிலவற்றைக் கொள்ளுவதும் சிலநூற்றுணிபு. அவையும் எவரும் ஒப்ப முடிந்தவென்பார் அம்முப்பத்திரண்டையும் இவ்வாசிரியர் அருணகிரிபுராணம் வலம்புரிச்சருக்கத்தில் (௯0) வது செய்யுண்முதலியவற்றில் விளக்கி, இங்ஙனங்கோடலை இவ்விருசெய்யுளின் விளக்கியருளினார். ஆகலின், அத்தொகையினடங்கிய பிறவும் ஆலயத்தில் இயற்றத்தகாதனவேயெனக் கொள்க, ஸ்நானஞ்செய்யாமலும் ஆசௌசத்துடனும் செல்லுதலாதிய ஏனைக்குற்றங்கள் இவ்விருதிறத்துள்ளே அசுசிமுதலியவற்றடங்கும். அஃதறிந்தடக்கிக்கொள்ளல்வேண்டும். விரிப்பிற் பெருகும்.

இக்குற்றங்கள் அபுத்திபூர்வமாகநேரின் வேதத்திலுள்ள உருத்திரமந்திரத்தை ஆயிரமுருச்செபிக்கின் முற்றுமகலும். அவ்வேதவாக்கிய மந்திரங்களை உச்சரித்தற்கு அருகரல்லாதவர் அகோரமந்திரத்தைஆயிரமுருச் செபிக்கக்கடவர். இக்குற்றங்களைப் புத்திபூர்வமாகவேயியற்றின் தப்பாது எரிவாய்நிரயத்தில் அழுந்துவது திண்ணம். இதற்குப் பரிகாரமுமில்லை என்பது வேதாகமபுராணாதிகளின் துணிபாகலின், ஆலயத்திலே புண்ணியத்தை நாடிப்போய் இத்தகைய செயல்களால் பாவத்தைத் தேடிக்கோடல் முறையன்று. ஆகையால், இவற்றுள் ஒன்றனையுமியற்றாது தத்தமக்கு விதித்தவாறே அவ்வவ்வெல்லையினின்று சுவாமிதரிசனஞ்செய்து திருவருளைப்பெற்று மீள்வதே கடமையாம். சுபம்.

திருக்கோயிற்குற்றச்சூசனம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

மறைஞானசம்பந்தநாயனார் திருவடிவாழ்க.

௳.

# பரிசோதனைபத்திரம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௯ | ௨௫ | ாளபஞ்சா | ரசபஞ்சா |
| ௧௫ | ௧௭ | றுத்தி, | றுத்தி |
| ௨௧ | ௧௮ | கதிதிடை | கத்திடை |
| ௨௭ | ௨௯ | துளொ | துறை |
| ௩௫ | ௨௪ | ஆட்றி | ஆட்டு |
| ௫௯ | ௨௭ | ளுன்றுமரல் | ளுன்றுமழல் |
| ௯௪ | ௨௫ | செய்தல | செய்தல் |